# பல்லவர் சரித்திரம்.





## தென்னிந்தியா வரலாற்றின் இடைப்பகுதி

பி. தி. ஸ்ரீநிவாஸய்யங்கார்

இயற்றியது



முதற்பாகம்.

(திருப்பி எழுதப்பெற்றது.)

மூன்றாம் பதிப்பு

விலை அணா 8 ]

# முன்னுரை

உலகந் தோன்றின நாள் தொடங்கி கடலுக்கு இரை யாகாமல் கவினுற்று விளங்குவது நம் தமிழ் நாடு. புறநாட்டுப் படைகளுக்குப் புறங்கொடுத்து ஓடியாமல் இன்றும் நின்று விளங்குவது நம் தமிழ் நாடு. மக்கள் தோன்றிய காலந் தொட்டு இந்நாட்டில் அவர்கள் வாழ்ந்து வருகின்றனர். முற்காலத்தில் மக்கள், உடுக்க உடையும், உறங்கக் குடிசையுமின்றி அலைந்து திரிந்தனர். பின்னர் இறைச்சியையுண்டு தோலைப் போர்த்தியும் அவர்கள் சிலகாலம் அலைந்தனர். அதன் பின்னர் படிப் படியாய் உயர்ந்து, உலகப் பொருள்களின் உண்மைச் சக்தியைச் சிறிது சிறிதாக உணர்ந்து, நிலத்தில் விரைந்து ஓடும் நீராவி வண்டியையும், கடலிற் கடிதிற் செல்லுங் கலங்களையும், விண்ணிற் பறக்கும் விமானங்களையும் அமைத்தனர். அவைகளின் வாயிலாக இன்பம் நுகர்ந்து வருகின்றனர். இவைபோன்ற மக்கள் வாழ்க்கையின் பல படிகளையும் கண்டறிந்தது நம் தமிழ் உலகம். இவ்வாறு காலங் கண்ட தமிழர் சரித்திரத்தை மூன்று பகுதிகளாகப் பிரிக்கலாம்.

1 அவற்றுள் முதற் பகுதி, படைப்புக் காலந்தொட்டு பல்லவர் தென்னாடு புகுந்ததுவரையில் உள்ள காலமாகும். இக்காலத்தின் தொடக்கத்தில் மக்கள் வழவழப்பில்லாத கற் கருவிகளை வழங்கி வந்தார்கள். இந்நிலையில் லட்சக் கணக்கான ஆண்டுகளைக் கழித்தனர். பின்பு அக் கருவிகளை வழவழப்பாகத் தேய்த்துப் பல ஆயிரம் ஆண்டுகள் வரையில் வழங்கி வந்தார்கள். பின்னர் மக்கள் கல்லை ஒழித்துவிட்டு

உலோகத்தைக் கொண்டு உபயோகத்திற்கேற்ற கருவிகளைச் செய்தனர். அவ்வுலோகந்தான் இரும்பாகும். இரும்புக் கருவிகளைக் கொண்டு வாழ்க்கை நடத்திய காலத்தை இரும்புக் கருவிக் காலம் என்பர். இக் கருவிகள் பன்னூறு வருஷ காலமளவு வழக்கிலிருந்தன. காலங்கழியக் கழிய மக்கள் மேலும் மேலும் உயர்நிலையுற்றனர். சேர, சோழ, பாண்டியர் என்னும் முடிமுடி மன்னர்கள் தமிழ் நாட்டை ஆளத்தொடங்கி ஆண்டுவந்தனர். இம்மன்னரின் ஆட்சிக் காலம் மிகச் சிறந்தது ஆகும். இக்காலத்தில் ஊரெங்கும் உழவுத்தொழில் பரவியிருந்தது. வீடுகளெங்கும் நன்செய் தானியங்களும் புன்செய் தானியங்களும் குவிந்து கிடந்தன. பருத்தியாலும் பட்டாலும் ஆகிய நுண்ணிய ஆடையால், மக்கள் தங்களை அலங்கரித்துக் கொண்டனர். பொன்னாலும் மணியாலும் அணிகள் அமைத்து அணிந்து அழகுற விளங்கினார்கள். நில வாணிபத்தோடு நீர் வாணிபத்தையும் நடத்திப் பொருள் சேகரித்தார்கள். கடலில் பண்டங் கொண்டு செல்லும் மரக் கலங்களையும், போர்கொண்டு செல்லும் மரக் கலங்களையும் போக்கினார்கள். மிடியுற்ற நாட்டாருக்குப் பொருள் தந்து, அவர்களை நம் நாட்டு ஏவலாட்களாகக் கொண்டனர். இத்தகைய சீரும் சிறப்பும் வாய்ந்த நமது தமிழகம் துலங்கிய காலத்தில், தண்டமிழ் அரசியை ஒள்ளிய சங்கப்பலகையில் ஏற்றி வைத்தனர் பாண்டி மன்னர். தமிழ்மொழி வல்ல அறிஞர்களை ஒன்று சேர்த்து, தமிழ்ச் சங்கம் நிறுவி தமிழை ஆராய்ந்து வரச் செய்தனர். அவ்வாறு தமிழ் மொழியை ஆராய்ந்து அறிந்துவந்த அறிஞர்கள் பலரையும் உயிரினும் உயர்பொருளாய்க் கருதி உபசரித்து வந்தனர் பாண்டிய மன்னர். அவைகளைப் பற்றி நோந்துழி விவரிப்போம். இவ்வுண்மைகளை உய்த்து

உணருவதற்குத் துணையாயிருப்பன அக்காலத்துக் கருவிகள், பிணங்களை அடக்கஞ் செய்த குழிகள், தனித் தமிழ் மொழிகள் முதலியனவாம்.

2. இற்றைக்கு ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் பல்லவர் தமிழகம் புகுந்து, கச்சிமா நகரைத் தலை நகராகக் கொண்டு ஆளத்தொடங்கினர். இக்காலத்தில் மதுரையில் மூன்றாஞ் சங்கம் இருந்தது போலும். பல்லவர் கச்சியிற் புகுந்த காலத்திலும், சேர, சோழ, பாண்டிய நாடுகளில் மன்னர்கள் இல்லாமலிருக்கவில்லை. எனினும் அக்காலத்திய மன்னர்களைப் பற்றிய பாடல்கள் பல படிக்கப் படுகின்றன. இந்நாளில் தமிழ்மொழியில் காணப்படுஞ் செய்யுள்களெல்லாம் கடைச் சங்கச் செய்யுள்களே. முன்னைய சங்கங்களின் செய்யுள்களெல்லாம் இருந்த சுவடு அறிவதற்கு இடமின்றி அழிந்துவிட்டன. பல்லவ அரசர் தமிழ் நாட்டிற்குச் செய்த நன்மைகள் பல. செப்புத் தகடுகளில் சாசனங்களை வெட்டுதலும், பாறைகளில் சாசனங்களை வெட்டுதலும் அவர்கள் காலத்தில் தொடக்க முற்றன. பல்லவர்காலத்துச் சரித்திரங்களை ஒழுங்காய் எழுதுவதற்குப் பெருந் துணையாயிருப்பன மேற் கூறிய இருவகைச் சாசனங்களும், இலக்கியங்களுமாம். இவர்கள் காலத்தில் நாடெங்கும் சைவமும், வைஷ்ணவமும் பரவின. தேவாரம், திருவாசகம் முதலிய திருமுறைகளும், நாலாயிரம் முதலிய திவ்விய பிரபந்தங்களும் தோன்றின. பல்லவ மன்னர்கள் இன்றேல் கற்கோயில்களெங்கே? குகைக் கோயில்களெங்கே? கல் வெட்டுகளெங்கே? இவர்களால் அன்றோ இவைகளெல்லாம் நம் நாட்டில் நாட்டப் பெற்றன.

3. இற்றைக்கு ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் தஞ்சாவூரில், சோழர் ஆட்சி மீண்டும் உயர்ந்தோங்க ஆரம்பித்

ந்தது. இச் சோழமன்னர்களைத் தஞ்சைச் சோழரென்பர். இவர்கள் ஆட்சி இருநூறு ஆண்டளவு நீடித்திருந்து பின்பு குறுகிவிட்டது. இக் காலத்தில் சேர நாடு கேரளநாடாயிற்று. அவ்விடத்திய மொழியும் மலையாள மொழியாக மாறிற்று. பாண்டியர் ஆட்சி ஓங்குகிறது. அவ்வாட்சியும் இருநூறு ஆண்டுகளுக்குப் பின்னர் குன்றத் தலைப்பட்டது. பின்பு பதினான்காம் நூற்றாண்டில் துங்கபத்திரை நதிக் கரையில் உள்ள ஆனைகுந்தியென்ற ஊரில் விஜயநகரராஜ்ஜியம் தோன்றிற்று. வடநாட்டிலிருந்து வந்த முகமதிய வெள்ளம் தென்னாடு புகாமல் அது தேக்குகிறது. அவ்விஜயநகர ஆட்சி தமிழ்நாடெல்லாம் பரவ ஆரம்பித்தது. இரண்டு நூற்றாண்டளவில் அவ்விராஜ்ஜியத்தின் செல்வாக்கும் நெகுரவுற்றது. பின்னர் முகமதியர் அரசாட்சி இந்நாட்டில் பரவலாயிற்று. அவர்களுக்குப் பின் ஆங்கிலர் நூறு ஆண்டுகளாய் ஆண்டு வருகிறார்கள். சோழ, பாண்டிய, பல்லவ, விஜய நகர காலங்களில் கட்டப்பட்ட கோவில்கள் எண்ணிறந்தன. அக்காலத்திற் றோன்றிய வரலாற்று நூல்கள் பல. இவைகளின் துணையைக் கொண்டு தமிழகச் சரித்திரத்தின் மூன்றாம் பகுதியை யெழுதலாம்.

இந் நூலில், தமிழக வரலாற்றின் இரண்டாம் பகுதியைப் பற்றி மூன்று பாகங்களிலும் சொல்லியிருக்கின்றேன். மற்றைய பகுதிகளும் முறையே எழுதப்பெறும்.

அந்தோ! இக் காலத்திய நிலையை என்னென்று கூறுவது! கல்வியைப் பரப்ப எடுத்துக் கொள்ளும் முயற்சிக்கோ அளவில்லை. செலவாகும் பணத்திற்கோ எல்லையில்லை. நம் நாட்டுச் சரிதையைக் கற்பிப்பாரும் இல்லை; கற்பாரும் இல்லை. நம் நாட்டு நிலையை அறியாது, பிறநாடுகளின் நிலையை அறி

# விஷய அட்டவணை.

---

# காலவரி

கி. பி. 0 பல்லவர் தென்னாடு வந்தது

50

100 சாலிவாகன சகாரம்பம்

150 பப்பகவர்மா

சிவஸ்கந்தமகாராஜா

200

250

300

350 மயூரசர்மா

கரிகாலன்

400

ஸிம்ஹவர்மா

450 கோச்செங்கணான்

நெடுஞ்செழியன்

500 செங்குட்டுவன்

550

நரஸிம்ஹவர்மா

600 மகேந்திரன்

மூன்றாம் சங்ககாலம்

# பல்லவர் சரித்திரம்.

## முதல் பாகம்.

### கி. பி. 200 முதல் கி. பி. 600 வரையில்.

நீர்வளமும் நிலவளப்பும் மிகுந்தோங்கியது நம்முடைய தமிழ் நாடு. அதில் சில ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் சேரர், சோழர், பாண்டியர் என்னும் மூவேந்தர் செங்கோல் செலுத்தி வந்தார்கள். சோழநாடு திருச்சிராப்பள்ளியின் ஓர் பகுதியான உறையூரைத் தலைநகராகக்கொண்டு கீழ்ச் சமுத்திரக் கரை வரையில் உள்ளது. பாண்டிய நாட்டுக்கு முதல் நகரம் மதுரை, அந்நாடு தென் சமுத்திரத்தை அண்டியுள்ளது. சேரநாடோ கரூர் முதல் மேற்குக் கடல் வரையில் பரவியிருந்தது. இம்மூவேந்தர் முன்னிலையில் தமிழ்ப் பயின்று பாட்டுக்கள் பாடும் பாவலர் பலர் அவ்வப்போது ஆதரிக்கப் பெற்று வந்தார்கள்.

தமிழ் நாட்டுக்கு வட எல்லை ஏழுமலையான் குடி கொண்டிருக்கும் வேங்கடம். இம்மலைக்குத் தெற்கும் சோழநாட்டுக்கு வடக்கும் உள்ளது தொண்டை மண்டலம். இதற்குத் தலைநகர் காஞ்சீபுரம். புண்ணிய க்ஷேத்திரங்களில் முதலானது என்று பெயர் பெற்றபட்டணம் இது. சிவன் கோயில் என்ன, விஷ்ணு ஆலயம் என்ன, உலக மாதாவை வழிபடும் வீடு என்ன, இவைகளால் உயர்நிலை பெற்ற ஊர். இவ்வூரில் 1800 வருஷங்களுக்கு முன், தமிழ்

மன்னர் அல்லாதார் ஆள ஆரம்பித்து, பலகாலம் வாழ்ந்து, நாட்டுக்குப் பல நன்மைகளை செய்தார்கள். அவர் பல்லவ குலத்தவர்; இப் பல்லவர் எங்கிருந்து வந்தவர், எவ்வாறு வாழ்ந்தோங்கி, பின்பு அழிந்தார் என்ற அருங்கதை தமிழர் அவசியமாய் அறியவேண்டியது.

## பல்லவர் கச்சிக்கு வந்தவாறு.

இந்திய நாட்டுக்கு வட மேற்கில் இருக்கும் நிலப் பகுதிக்கு நம்முன்னோர் சகத்தீபம் என்று பெயரிட்டார். அந்நாட்டவர்களுக்குச் சகர் என்றும் பல்லவர் என்றும் பெயர். தொன்று தொட்டு, இப் பல்லவர்கள் நம் நாட்டுக்கு நாட்டு வழியாயும், கடல் வழியாயும் வருவது, போவது உண்டு என்று புராணங்களிலிருந்து அறியலாம்.

கி. மு. 500 வருஷங்களுக்கு முன்பே இச்சகப் பல்லவர்கள் ஆப்கானிஸ்தானத்து மேற்கு பாகத்தில் குடியேறினார்கள். அதனால் அந்நாட்டுக்குச் சகஸ்தானம் என்று பெயர் பிறந்தது. சகஸ்தானத்திலிருக்கும்போது சகப் பல்லவர்கள் சைவ, வைஷ்ணவ, பௌத்த, சமண முதலிய முறைகளைத் தழுவினார்கள். அதனால் நம்முடைய நாட்டவருடன் கலந்து ஒன்றாயினார். நாடு முழுவதும் பரவினார். அங்கங்கே சக பல்லவ அரசர்களும் தோன்றினார். பழைய காலத்தில் உயர்நிலை அடைந்திருந்த ஊர்களான தக்கசிலை, வடமதுரை, உஜ்ஜயினி முதலிய பட்டணங்கள் இவ்வரசர்களுக்குத் தலை நகரங்களா யிருந்தன. கிரமமாய்ப் பல்லவர்கள் வடக்கிலிருந்து தென்னாடு வந்து சேர்ந்தார்கள். அவ்வாறு வந்து காஞ்சீபுரத்தில் தங்கள் அரசாட்சியை ஏற்படுத்தினார்கள்.

# 3

## மகாராஜா பப்பசுவாமி.

பல்லவ இராஜ்ஜியத்தைக் காஞ்சியில் ஏற்படுத்தின அரசன் பெயர் இது என்று தெரியவில்லை. நமக்குத் தெரிந்தவருள் முதல்வன் பெயர் மகாராஜா பப்பசுவாமி. இவன் ஆண்டது இப்போதைக்கு ஏறக்குறைய 1,700 வருஷங்களுக்கு முன். இவன் இராஜ்ஜியம் தொண்டை மண்டலத்தில் மாத்திரமல்ல, தெலுங்கு நாடு முழுவதும் பரவி யிருந்தது. பெஜவாடாவுக்கு அடுத்த தானியகடகம் என்று முற்காலத்தில் சிறந்தோங்கின பட்டணமும் பப்பசுவாமிக்கு மற்றோர் தலை நகரமாய் இருந்தது.

இந்தப் பப்பமகாராஜா வடநாட்டிலிருந்து ஆத்திரேய, ஹாரித, பரத்துவாஜ, கௌசிக, காசிப, வத்ஸ என்ற ஆறு கோத்திரங்களைச் சேர்ந்த பிராமணர்கள் பல குடும்பத்தாரை வரவழைத்துத் தொண்டை மண்டலத்தில் குடியேற்றுவித்தான். பப்பன் காலத்துக்கு முன் பிராமணர்கள் தமிழ் நாட்டில் அதிகமாகப் பரவி இருந்ததாக அடையாளம் ஒன்றும் காணோம். கொஞ்சமாய்த் தான் இருந்திருக்க வேண்டும். பப்பசுவாமி தன் குலத்தார் புண்ணியமும், வாழ்நாளும், உடல் வலியும், புகழும் வளர்ந்தோங்கும் பொருட்டுப் பல கோடிப் பொற்காசும், நூறாயிரம் ஏர்களும், பிராமணர்களுக்கு நிலங்களும் தானம் செய்ததாகத் தெரியவருகிறது. அவர்கள் அந்தப் பூமியிலிருந்து உண்டாகும் பொருள்களைக் கொண்டு, கஷ்டப்படாமல் பிழைத்து வந்து, வாழ்நாள்களை வைதிக காரியம், தெய்வ பூஜை, படிப்பு முதலிய நல்வழிகளில் செலவழித்து வந்தார்கள். காஞ்சிபுரத்தில் கடிகை யென்னும் வடமொழிக் கல்வி கற்கும் கல்லூரியும் உண்டாய்ப் பெரும் பேர்பெற்று விளங்கிற்று

பல்லவ மன்னர்கள் காஞ்சீபுரத்தில் அரசாட்சி செய்யத் தொடங்கு முன், ஆரிய மொழியும் ஆரிய முறைகளும் தமிழ் நாட்டில் அதிகமாகப் பரவவில்லை. பௌத்த, சமண பிராமணத் துறவிகள் மாத்திரம் காடுகளிலும், மலைக்குகைகளிலும் இருந்து தவம் புரிந்து வந்தார்கள். தமிழ் நாட்டிலுள்ள பல மலைக்குகைகளில் இம்முனிவர்கள் கல்லில் வெட்டின எழுத்துக்கள் சில காணலாம். தமிழர் சிலர் சமண முறை, பௌத்த முறைகளைக் கைப்பற்றினார்கள். தமிழரசர்கள் இத்துறவிகளை ஆதரித்தார்கள். ஆனாலும் தமிழ் நாட்டில் வடமொழி கலக்காத முழுத் தமிழ்ச்சொற்களை மக்கள் பேசினார்கள். அப்போது ஆரியத் தெய்வங்களைத் தமிழர் தொழுத அடையாளங்கள் ஒன்றும் அகப்படவில்லை. வைதிக யாகங்கள் தமிழ் மன்னர் நடத்தி வைக்கவில்லை. அரசியலும் வடமொழியில் இருக்கும் சாஸ்திர விதிப்பிரகாரம் நடக்காமல் பழைய தமிழ் முறையிலே நிகழ்ந்தது.

காஞ்சீபுரப் பல்லவரோ இவ்வாறல்ல. க்ஷத்திரிய குலத்தவர். அவர் பேரோ பிராகிருத மொழி. இராஜ்ஜிய பரிபாலனத்தை ஆரிய சாஸ்திரங்களை அனுசரித்துத் தான் நடத்தினார்கள். அவர் கீழிருந்த இராஜாங்க உத்தியோகஸ்தர்களுக்கு வட மொழிப்பெயர்களே உண்டு. அரசர் பிரஜைகளிடமிருந்து பெற்ற வரிகள் ஆரிய தரும சாஸ்திரங்களில் சொல்லியிருப்பவையே. வடநாட்டு வழக்கங்களை யொட்டிப் பிராமணர்களுக்கும் கோயில்களுக்கும் தானங்கள் கொடுத்த போது, தாமிரப் பட்டயங்களில் தான் சாசனங்களைச் செதுக்குவித்தார்கள். இந்தச் சாசனங்களை பிராகிருத, ஸம்ஸ்கிருத பாஷைகளில் எழுதினார்கள். இவைகளில் தமிழ் மொழிக்கலப்பு கொஞ்சமாவது இல்லை. இவ்வாறு

காஞ்சிபுரத்தில் ஆரம்பித்த ஆரியர் ஆட்சிமுறைகள் ஆரியர் வைதிக முறைகள், ஆரிய மொழிககலவி, ஆரியர் ஆசாரங்கள முதலியன தமிழ்நாட்டில் பரவின. கொஞ்ச காலத்துக்குள் ஆரியமும, திராவிடமும, வட நாட்டுத தென்னாட்டு வாழ்முறைகளும், தொழுமுறைகளும் ஒன்று கலந்து, தென்னாடு உயாநதோங்கி, தமிழகமானது உலகுக்குத தலையான இப பரதநாட்டுக்குத் தலைமேலணியும் கிரீடமாய் விளங்கும பெருநிலையைப் பெறறது. இக் கதையைத் தமிழா அனைவ நம அறியவேண்டாமோ?

## சிவகந்த மகாராஜாதிராஜன்.

பப்பசுவாமிக்குப் பின் அவன் மகன் சிவகந்தனென்பான சிம்மாதனம் ஏறினான். சிவகந்தன் சிறுவனாயிருக்கும போதே செல்வாக்கு மிகுந்திருந்ததாகத் தெரியவருகிறது. தகப்பன் ஆண்டுவருமபோது சிவகந்தனுக்கு இளவரசுப் பட்டத்தையும அதிகாரத்தையும அளித்தான். இளவரசனாயிருக்கும்போது பிராமணாகளுக்குச் சில நிலங்களைத் தானம செய்தான். தானம அளித்த சாசனம் செப்புப் பட்டயத்தில எழுதினது கொஞ்சகாலத்துககு முன் கிருஷ்ணா ஜில்லா, நரஸாராவுபேட்டைத் தாலூகாவிலுள்ள மைதவோலு என்னும் கிராமத்தில் பாழ்நிலமொன்றை உழுதபோது கிடைத்தது. இது பிராகிருத மொழியிலெழுதியது.

சிலகாலம் சென்றபின்பு பப்பமகாராஜா இறக்க, சிவகந்தன் அரசனானான். தருமமகா ராஜாதிராஜன் என்ற பட்டத்தையும ஏற்றுக்கொண்டான். மகாராஜன் என்பதை விட தருமமகா ராஜாதிராஜன் என்பது மிக உயர்ந்த பதவி

யைக் குறிக்கும். ஒரு சிறு நாட்டுத் தலைவனுக்கும் மகா ராஜன் என்ற பெயருண்டு. பல நாடுகளுக்கு அதிபதியாய், மன்னர்க்கு மன்னனாய் விளங்குவோனே மகாராஜாதிராஜன். வைதிக முறைப்படி அபிஷேகம் பெற்றவன் தருமமகா ராஜாதிராஜனுவான். தருமமகா ராஜாதிராஜன் சிவஸ்கந்த சுவாமி அபிஷேகம் அடைந்தபின்பு, சுற்றுமுள்ள மன்னர் செருக்கை அழித்து, நாடுகள் பலவற்றைக் கைக்கொண்டு, பெருவேள்விகளான அக்கினிஷ்டோமம், வாஜபேயம், அசுவமேதம், முதலிய யாகங்களை நடத்திவைத்தான்.

இவன் ஆண்ட நாடுகள் தெற்கே கொள்ளிடம், வடக்கே கோதாவரி, இந்நதிகளுக்கு நடுவிலிருப்பவைகளாம். அதாவது தமிழ்நாட்டின் ஒரு சிறு பகுதியும் தெலுங்கு நாட்டின் பெரும்பகுதியும் இவன் ஆளுகைக்கு உட்பட்டிருந்தன. இவனது பிரதானமான தலைநகரம் காஞ்சிபுரம். அவ்வூரில் சிவாலயம், விஷ்ணுவாலயங்களை இந்த சிவஸ்கந்தன ஏற்பாடு செய்ததுமல்லாமல், வடமொழி பயிலக் கடிகைகளென்னும் கல்விச்சாலைகளை நடத்திவந்ததால் ஆரியமொழி, ஆரியமுறைகள் அங்கே பெருகி, விளங்கி ஓங்கின. காஞ்சிபுரமும் பரதநாட்டின் முக்கிய ஸ்தலங்கள் ஏழில் ஒன்றாய்ப் பொலிந்தது.

இவனது இரண்டாவது தலை நகரம் அமராவதி. இது தான் முன்பு கூறிய பப்ப மகாராஜாவுக்குந் தலைநகரா யிருந்தது. இது கிருஷ்ணை நதிக்கரையில் பெஜவாடாவுக் கருகில் இருந்தது. இவ்வூரில் அக்காலத்தில் பௌத்த முனிவர் பலர் ஒரு பெரிய மடத்தில் வசித்தார்கள். இம்மடம் கருங்கல்லால் கட்டப்பெற்றிருந்ததுமன்றி, கல்லில் செதுக்

கின அற்புதமான சிற்பங்கள் இதில் நிறைந்திருந்தன. பிற் காலத்தில் பௌத்தநெறி இந்நாட்டில் நிலைகுலைந்துபோக, இந்த மடம் இடிந்துபோயிற்று. அதிலிருந்த விக்கிரகங் களையும், சித்திர பணிகளையும் வேறு வேறு இடங்களுக்குக் கொண்டுபோய், பல கண்காட்சிச் சாலைகளில் வைத்திருக் கிறார்கள். இப்போது மடமிருந்த சுவடுதான் பூமிமேல் காணலாம். இந்த அமராவதி நகரத்துக்குத் தானியகடகமென்று மற்றோர் நாமமுண்டு.

சிவகந்த மகாராஜன் யாகங்கள் பல நிறைவேற்றினன் என்றோம். அவைகளை நடத்த பற்பல கோத்திரங்களில் பிறந்து, நான்மறைகள் ஓதிய வேதியர்களை வரவழைத்து அவர்களுக்கு பூமிதானம் செய்து, நாட்டில் குடியேற்றுவித் தான். அவர்களுக்குக் கொடுத்த தான சாசனங்கள் செப் புப் பட்டயங்களில் செதுக்கினது ஒன்று சில நாட்களுக்கு முன் பெல்லாரி ஜில்லாவிலுள்ள ஹீரஹடகள்ளியென்னும் கிராமத்தில் வசித்துவந்த ஓர் வணிகனிடமிருந்து அகப்பட் டது. இவ்வாறு அரசனிடத்திலிருந்து மானியம்பெற்ற அந்தணர்கள் தமிழ் நாட்டில் பெருகி, அங்கே ஆரியர் தொழுமுறைகளையும் ஆரிய மொழியிலுள்ள கலைகளையும் அம்மொழியில் பாண்டித்தியத்தையும் பரவச் செய்தார்கள். இந்த சாசனங்களைக் கொடுக்குமுறை யாதென்றால், முதலில் அரசன் தானம் செய்யத் தீர்மானித்து, மந்திரியிடமோ, சேனாதிபதியிடமோ, தன் ஆணையைத் தெரிவிப்பான். அவர் அதை இரகசியாதிகாரர்கள் என்னும் உத்தியோ கஸ்தர்க்குச் சொல்வார். இவர் அதை சாஸ்திர முறையைப் பின்தொடர்ந்து ஓலையிலெழுதுவார். இவ்வாறு எழுதிய

சாசனத்தை ஆதியோடந்தமாய் அரசன் படித்துப் பார்ப்பான். பின்பு அதன்மேல் அரசன் முத்திரையை யிடுவார்கள். அச்சாசனத்தை அரசன் நீரவார்த்துக் கொடுப்பான். பின்பு கம்மாளன் அதை ஓலையைப்போல செய்த செப்புப் பட்டயங்களில் செதுக்கி அவைகளை சேர்த்துக் கட்டி ஒரு செப்பு மோதிரம் செய்து அதில் கோர்ப்பான். அம்மோதிரத்தின் மேல் அரசன் முத்திரையை யிட்டு மானியம்பெற்ற பிராமணர்களுக்குக் கொடுப்பார்.

மேற்கூறிய இரண்டு சாசனங்களிலிருந்து அக் காலத்தில் பல்லவ ராஜ்ஜியத்தில் நிகழ்ந்த அரசு முறைகளை அறியலாம். அம்முறைகளும் தொன்றுதொட்டுத் தமிழ் வேந்தர் நடத்திய முறைகளும் வேறு. பல்லவ ராஜ்ஜியத்தை இரட்டம், விஷயம், வட்டம், கிராமங்களாகிய பிரிவுகளாகப் பிரித்திருந்தனர். இப்பிரிவுகளை ஆள்வோர்க்கு இரட்டிகர், விஷயேசர், தேசாதிகர், வாபதர் என்று பெயர்கள் உண்டு. இப்பெரும் பதவிகளை அரசகுமாரர்களும், சேனாதிபதிகளும் தான் பெறுவர். எப்பொழுதும் அரசரருகில் இருந்து எல்லா வியவகாரங்களையும் நடத்துவோர் அமைச்சரும், இரகசியாதிகரும்; நாட்டு வாணிகத்திலிருந்தும் கடல் வாணிகத்திலிருந்தும் இராஜாங்கத்துக்குச் சேரவேண்டிய வரிகளை வாங்கும் இடங்களுக்கு மண்டபங்கள் என்று பெயர், அம்மண்டபங்களிலிருந்து வரி வாங்குவோரை மண்டபிகள் என்பர். நீர் நிலைகளையும், நீராட வருபவர்க்கு இடையூறுகள் வராமல் காப்போர்க்குத் தீர்த்திகர் என்று பெயர். காடு வனங்களைப் போற்றுவோருக்குக் குமிகர் என்பர். சேனாதிபதிகள் கீழிருந்து நிலைப்படையைச் சேர்ந்த போர்வீரர்களை

நாயக்கர் என்பவர் கவனிப்பார். சங்கரந்தகர்கள் நாட்டில் நாலா பக்கமும் அலைந்து ஆங்காங்கு நிகழும் நிகழ்ச்சிகளை அரசர்க்கு அறிவித்து, அவர் ஆணையை மக்களுக்குத் தெரிவிப்பார்கள். இப்பலவித உத்தியோகஸ்தர்களின் பெயர்கள் எல்லாம் வடமொழிச் சொற்களே. இவ்வாறு செலுத்தின ஆளுகையின் ஏற்பாடும் வடமொழியில் எழுதியுள்ள அர்த்த சாஸ்திரத்திலடங்கிய தண்ட நீதியை அனுசரித்து வடநாட்டில் வழங்கி வந்தவைகளே.

அரசர்க்குரிய நிலவரி, நிலத்தில் உண்டாகும் பயிரில் ஆறிலொரு பங்கு. இது தவிர பதினெண்வகைச் சிறு வருவாய்கள் இருந்தவையாகச் சாசனங்களினின்றும் தெரிய வருகிறது. அவைகளில் முக்கியமாவன:—அரசன் அரண்மனைச் செலவுக்கு வேண்டிய பால், தயிர் கொடுத்தல், அதிகாரிகள் நாட்டைச்சுற்றி வருங்கால் அவர்கள் பிரயாணம் செய்ய வண்டி, மாடு அனுப்புதல், அவர்களுக்குத் தங்க வீடும், தூங்கக் கட்டிலும், உண்ணச்சோறும், வழங்கச் செம்பு, தவலை, முதலியனவும் கொடுத்தல், அரண்மனைக்கு வேண்டிய புல், விறகு, கறியாப், பூ முதலியவை அனுப்புதல், அரசர்க்கு ஊழியம் செய்ய ஒவ்வொரு கிராமத்திலிருந்தும், கிராமப் பொதுச் செலவில் "வெட்டி" வேலைக்காரர் அனுப்புதல். இது தவிர, உப்பும் வெல்லமும் காய்ச்சுதல் அரசர்களது உரிமையே.

சிவகந்த மகாராஜன் காலத்தில் கச்சிப பல்லவ ராஜ்ஜியத்துக்கும் மற்றைய நாடுகளுக்கும் வாணிகம் மிக நடந்தது. 'பெரிப்லூஸ்' என்ற யவன (கிரேக்க) மொழியில் எழுதின ஓர் சிறு புஸ்தகத்தில் கமரா, பொதுகா, சொபத்மா என்ற

மூன்று துறைமுகங்கள் அப்போது இருந்தனவாகச் சொல்லியிருக்கிறது. எப்பெயர்கள் மாறி இவ்வாறு யவன மொழியில் ஆயிற்றென்று தெரியவில்லை. ஆனால் இப்போது மகாபலிபுரம என்று சென்னப்பட்டணத்துக்குத் தெற்கே இருக்கும் ஊர் இம்மூன்றில ஒன்று. இத்துறைமுகங்களிலிருந்து கப்பல் வழியாய்ச சிமமாம, ஸுவர்ண பூமி, (இபபோது, பர்மா என்பார்), சாவகம (ஜாவா) முதலிய தீவுகளுக்கும், சீனம் முதலிய நாடுகளுக்கும வணிகம நிகழ்ந்தது. பல்லவர் காலத்துக் காசுகள் அகபபட்டவைகளில தோணியைப போல் சித்திரம வெட்டியிருபபதால் கபபல வியாபாரம அதிகமாய் நடநததென்பதற்குத தடையே இலலை. அன்றியும், காஞ்சிபுரததுக்கு அடுதத கிழ் சமுததிரக் கரையில் உரோமாபுரி நாணயங்கள் பூமியில புதைநது கிடநது அடிக்கடி அகபபடுவதால, ஐரோபபா கண்டததுடனும வணிகம மிகவும நடநததென்றும அறியலாம.

சிவகநத மகாராஜன் காலம யாது? இவனது சாசனங்களின் எழுததுநடை, மொழிநடையையும மற்றைய பல விஷயங்களையும கருதி, கி. பி. மூன்றும நூற்றாண்டில இவன் ஆண்டிருக்க வேண்டும் என்று தெரிய வருகிறது. அப்போது தமிழகத்தில சேர, சோழ, பாண்டிய மன்னாகள் பலா இருநதார் என்றோம். அவ்வாசாகள் பலரைபபுகழ்நது தமிழில பாடின அகவலகள் பல புறம், அகம் என்ற சங்கச செய்யுள் தொகைகளில உள, இவைகளில பல்லவரைக் குறித்து ஒன்றுமேயில்லை ஆகையால ஆரிய முறைகளை அனுசரித்த இப் பலலவர்களுக்கும பழைய தமிழ் முறைகளையே பின் தொடாநத பண்டைய தமிழ்மன்னாகளுக்கும் சம்பநதம் அதிகமாக இல்லைபோலும.

## கதம்பா.

கி. பி. 4-ம் நூற்றாண்டின் இறுதியில் கதம்பர் என்று ஒரு புதிய அரசகுலத்தார் தோன்றினர். இவர் தோன்றின கதையை அழகிய ஆரியக் காவிய மொழியில் ஓர் சாசனத்தில் எழுதி யிருக்கிறது:—

கதம்ப குலத்தில் சுருதி, சீலம், சௌசம், முதலிய நற்குணங்களால் அழகுபெற்ற ஸ்ரீமான் மயூரசர்மன் என்னும் பிராமணோத்தமன் இருந்தான். அவன் குருவான வீரசர்மனுடன் பல்லவேந்திரபுரியான காஞ்சிபுரத்தை அடைந்து, சகல சாஸ்திரங்களைப் படிக்க ஆவலுடன் ஒரு கடிகையில் யாசகம் செய்து பிழைக்கும் மாணவனாய்ப் பிரவேசித்தான். அங்கே ஒரு பல்லவக் குதிரை வீரனுக்கும் இவனுக்கும் சண்டை உண்டாயிற்று, அப்போது தீவிர மாயக் கோபம் கொண்டு பின்வருமாறு ஆலோசித்தான்:— ஐயோ, கலியுகத்தில் க்ஷத்திரியத்தைவிடப் பிராமணத்துவம் எவ்வளவு இளைத்துப் போய்விட்டது. குரு குல வாசம் செய்து வேத சாகையை அத்தியயனம் செய்தவனுக்குக் கூட அரசன் தயையன்றி, பிரசித்தி கிடையாமல் இருந்தால் இதைவிடத் துக்கம் உண்டா? ஆகையால் சமித்து முதலிய யாகப் பொருள்களை வழங்கவல்ல கைகளால் உலகை வெல்ல ஒளி தரும் வாளை உறையிலிருந்து உருவினான். பல்லவேந்திரர் நாட்டு எல்லை காப்போரை உடனே ஜயித்து ஸ்ரீசைலம் என்கிற ஸ்ரீ பர்வதத்தைச் சுற்றியுள்ள புகுதற்கரிய அடவிகளைக் கைப்பற்றினான். தமிழ் நாட்டுக்கும் தெலுங்கு நாட்டுக்கும் நடுவிலுள்ள வடுக வழி என்பதின் அரசனை

பெருமையான மன்னனையும் வேறு வேந்தரையும் தனக்குக் கப்பங் கட்டச் செய்தான். பல்லவேந்திரா முகம் வாடி மாறு இவ்வீரத்தொழில்களைப் பூஷணமாய்ப் பூண்டு விளங்கினன். பல்லவர் நாட்டை அடிக்கடி கொள்ளையடித்தான். அதனால் கச்சி நகாக் காவலாகள் பெரும் படையுடன் அவனோடு யுத்தம் செய்யப் புறப்பட்டு வந்தாாகள். பல்லவா சேனை இரவில் நடந்துகொண்டிருக்கும்போதும், கரடுமுரடான இடங்களில் தங்கியிருக்கும்போதும், மயூரசாமன் அதைப் பருந்துபோல வந்து அடித்தான். இவ்வாறு தன் தோளவலியைக் கொண்டு பல்லவா பலத்தைக் குறைக்க, அவா இவன் வீரத்தையும் குலத்தையும் கருதி, இவனைக் கெடுப்பது நல்லது அல்ல என்று நிச்சயித்து, இவனுடன் சிநேகம் செய்தாா. பின்பு மயூரசாமன் காஞ்சிபுர அரசா மற்றவாகளோடு செய்த போாகளில் அவா பக்கத்தில் துணையாயிருந்து செய்த வீரத்தொழில்களைக் கண்டு, களித்து, பல்லவா தங்கள் கரபல்லவங்களால் அவனுக்குப் பட்டபந்தம் செய்தாா. இவ்வாறு உண்டான கதம்பராஜ்ஜியம் கன்னட நாட்டில் விரைவாய் உயாந்தோங்கத்தொடங்கிற்று. பல்லவா வலியும் நாளடைவில் குன்ற ஆரம்பித்தது.

## கரிகால் சோழன்.

கி. பி. 4-ம் நூற்றாண்டில் உறையூரில் கரிகால சோழன் என்னும் வீரன், சோழ நாட்டுக்கு அரசனானன். சேரா, பாண்டியரையும், சிம்மள அரசரையும் போரில் தோற்கடித்துப் பெரும்புகழ் பெற்றுக் காவிரிப் பூம்பட்டினத்தைத் தன் தலை நகராயாக்கினன். அப்போது காஞ்சீபுரத்தில்

பும் தனித்தமிழ் வழிகளே யன்றி, பிற்காலத்திய காவியங்களைப் போன்று வடமொழி வழிகளைப் பின்பற்றினவை இல்லை. நூல்கள் பாடினோரிலும் அந்தணர் சிலரே ஒழிய, பலர் இரார். கரிகாலன் காஞ்சிபுரமாண்டவன் பின்பு, ஆரிய முறைகள் தமிழ்நாட்டில் அதிகமாய்ப் பரவின. கரிகாலனே ஆரிய வேள்விகள் செய்ததாகப் புறம் என்னும் தொகையிலிருக்கும் சில பாக்களால் தெரியவருகிறது. கரிகாலன் காலத்துக்குப்பின் மதுரையில் ஆண்ட பாண்டியன் ஒருவனுக்குப் பல்யாகசாலை முதுகுடுமி என்று பெயர். இவ்வாறு தமிழரசரும் ஆரிய வேள்விகளை நடத்த ஆரம்பிக்கத் தமிழ்நாட்டில் அந்தணர் அதிகாரிகளாயினர்

## சமய நிலை

ஆரிய வேள்வி என்றால் என்ன? தமிழர் வேள்விக்கும் அதற்கும் வேற்றுமை என்ன? ஆரியர் கொள்கைப்படி அக்கினியானவன் தேவர்களுக்கு வாய் என்பதும், அதனால் எந்தத் தேவர்களுக்கும் எவ்விதப் பொருளைக் கொடுத்தாலும் அதை அக்கினியில் இட்டுச் செய்யவேண்டுமென்பதும், அப்படி ஹோமம் செய்யும்போது வேதமொழியில் மந்திரங்கள் ஓதவேண்டுமென்பதுமே. தமிழர் முறையோ அவ்வாறல்ல. திருமுருகாற்றுப்படை என்று நக்கீரர் இயற்றிய பாட்டில் ஆரியர் முறைகள் இந்நாட்டில் பரவுமுன் தமிழர் முருகனைத் தொழுத முறையைப்பற்றிப் பாடியிருக்கிறது. அது எவ்வாறெனின்:—சிறிய தினையரிசியைப் பூக்களோடே கலந்து வைத்து, மறியை யறுத்து, கோழிக்கொடியோடே அவ்விடத்தை நிறுத்தி, நெய்யோடே வெண்சிறு கடுகையும் அப்பி, அழகிய மலர்களைத் தூவி, இரண்டு துணிகளை உள்ளொன்றும் புறமொன்றுமாக உடுத்து சிவந்த

நூலினால் கையிலே காப்பு கட்டி, வெள்ளிய பொரியைத் தூவி, கிடாவின் உதிரத்தோடு பிசைந்த வெள்ளரிசியைச் சிறு பலியாக இட்டு, சிறிய பசு மஞ்சளோடே நறிய சந்தன முதலியவற்றையும் தெளித்து, பெரிய குளிர்ந்த செவ்வலரி மாலையையும் வேறு குளிர்ந்த மாலைகளையும் அறுத்துப் பூங்கோயிலாகத் தூக்கி, ஊர்களினின்று பசியும் பிணியும் பகையும் நீங்குக என்று வாழ்த்தி, நறிய தூபங்கொடுத்து பல்லியங்களை ஒலித்து, பாட்டுகளைப்பாடி, உதிரமளைந்து சிவந்த தினையரிசியினையும் பரப்பி வேலனைத் தொழுதார்கள். இப்போதும் அந்தணர் முறையில் பூஜை நடக்காத கோயில்களில் சற்றேறக்குறைய இவ்வாறே தேவர், தேவிகளைத் தொழுகிறார்கள்.

இவ்விருமுறைகள் தவிர சமணர் நெறி, பௌத்தர் நெறி இவையிரண்டுங்கூட தமிழ் நாட்டில் அப்போது மிகப் பரவியிருந்தன. பௌத்தர் அமராவதியில் பெரிய மடம் கட்டிக்கொண்டு வசித்தனர் என்று முன்னரே கூறினோம்.

தமிழ் நாடு முழுவதும் உள்ள மலைக்குகைகளில் சமணர் பலர் குடியிருந்ததற்கு அடையாளங்கள் பல உள. கரிகாலனுக்கு முன்வாழ்ந்த சோழ அரசர் சிலர் சமண நெறியைத் தழுவினதாகத் தெரியவருகிறது. சமணரும், பௌத்தரும் கொல்லாவிரதங் கொண்டவர்கள். ஆகையால் அவர் வேள்விகளெல்லாம் கூடாதெனவும், அறம் பயில்வதே வீடு பெறுவதற்கு உதவும் எனவும் கொண்ட கொள்கையினர். இந்நெறிகள் தவிர, இந்திரன் கோயில், பலதேவன் கோயில், விஷ்ணுகோயில், சிவன் கோயில்களும் நாட்டில் பல தோன்றின.

இவ்வாறு பலவித வழிபாடுகள் ஒரே காலத்தில் இருந்தன என்பதைச் சிலப்பதிகாரத்தில் இந்திரவிழவூரெடுத்த காதையில் செவ்வையாய்ச் சொல்லியிருக்கிறது. காவிரிப்பூம்பட்டினத்தில் ஓர் பூஞ்சோலையில் நோயாளிகள் நோய் தீருமாறு ஒரு திருப்பொய்கையை வலஞ்செய்து தொழுது அதில் நீராடினார்கள். பித்தரும் பேய் பிடித்தாரும் விஷப்பல் தீண்டினவர்களும் அத்துபாகளை நீக்குதற்கு மற்றோர் புறத்தில் நாட்டியிருந்த நெடுங்கல்லைச் சூழ்வந்து தொழுதார்கள். பூதசதுக்கத்தில் கணவனை வசியஞ்செய்ய விரும்பின பெண்களும், அரசரைத் தாழ்வாக எண்ணும் அமைச்சரும், பிறர் மனைவியை விரும்பின துஷ்டர்களும், பொய் சொல்வாரும், இவர்கள் என் கைப்பாசத்தில் அகப்படுவார், அகப்பட்டவுடன் அவரை அடித்து உண்பேனென்று கூறுமாறு நின்ற ஒரு பூதத்துக்குச் சிலர் பலியிட்டார்கள். வெள்ளி ஐராவதமும், ஐராவதக் கொடியும், மரகதமும் வைரமும் இழைத்த பலகையும், பவழத்தூண்களுள்ள திண்ணைகளுமுடைய வீடுகள் நிறைந்து, மகரதோரணங்கள் கட்டின வீதிகளில் மக்களெல்லோருங்கூடி அரசனைவாழ்த்தி காவிரிச்சங்கமத்துறையில் நீரைப் பொற்குடத்திலேந்தி, இந்திரனுக்குத் திருமஞ்சனமாட்டி விழாமுடித்து, அத்தேவனை அவன் கோயிலுக்குக் கொண்டுவந்து விட்டார்கள். ஆறுமுகவேள் கோயிலிலும், வெண்குடையையுடைய வாசவன் கோயிலிலும் பலர் தொழுதார்கள். மற்றோர் பக்கத்தில் பிரமன் வாயிலிருந்து எழுந்த வேதங்களிற் சொல்லியுள்ள நெறிப்படி ஹோமங்கள் நிகழ்ந்தன. அருகர் பள்ளி, புத்தர் பள்ளி, முதலியவற்றில் அறமும், புராணமும் போதித்தனர். இவ்வகைப் பலவாறான சமயங்கள் ஓரூரிலேயே நிறைந்திருந்தன.

## கோயில்கள்.

இந்தக் கோயில்கள் செங்கல், சுண்ணாம்பு; அல்லது களி மண்ணால் கட்டின சுவர்களையுடையன. மற்றைய பாகங்களெல்லாம் மரத்தால் செய்யப்பட்டவை. இக்காலத்தில்கூட மலையாளத்தில் மரத்தாலான ஆலயங்கள் பல உண்டு. அவைகளைப்போன்றே அக்கோயில்கள் இருந்திருக்க வேண்டும். மேற்கூறிய கோயில்களெல்லாம் மரத்தினாலும், சுட்ட மண்ணினாலும் கட்டிய கட்டிடங்கள் ஆகையால் முன்னூறு நானூறு ஆண்டுகளுக்குமேல் நில்லா. ஐந்நூறு வருஷங்கள் சென்றபின், இந்தச் சுவடில்லாமல் போய்விடும். ஆகையால் இப்பண்டைய கோயில்களை இக்காலத்தில் காணமுடியாது.

அப்போது தமிழ் மன்னர் கோயில்களுக்கு நிலமாவது வேறுவிதமான பொருள்களையாவது தானம் செய்தாரோ, இல்லையோ என்று அறிவதற்கு இடம் இல்லை. நீர்வார்த்துத் தத்தம் [illegible], செப்புப்பட்டயத்தில் தான சாசனம் எழுதிக் கொடுப்பது ஆகிய முறையென்றே தோன்றுகிறது. ஆயிர வருஷங்களுக்கு முன்னர் எழுதிய தரும சாஸ்திரங்களில் இம்முறையை விரிவாய்ச் சொல்லியிருக்கிறது. அக்காலத்திய தமிழ் நூல்களிலோ இதைப்பற்றி ஒன்றும் காணோம். அ[illegible]யூர் செப்பேட்டில் இதுவரையில் அகப்பட்டிருக்கும் பழய சாஸனங்களெல்லாம் பிராகிருதத்திலாவது, ஸம்ஸ்கிருதத்திலாவது எழுதியவையும், பல்லவர் கொடுத்தவைகளுமாய் இருக்கின்றன. இதற்கு உதாரணமாக சிவகந்தன் காலத்துக்குப் பின் ஆண்ட பல்லவகுலத்தவன், விஜய கந்தவர்மனது மகனான விஜயபுத்தவர்மனுடைய பெண்சாதியும் புத்திபன்குரன் என்னும் இளவரசன் தாயுமான

சாருதேவியென்பவள் ஏறக்குறைய கி. பி. 300-ம் ஆண்டில் தலூரததில உள்ள சூளிமகாதாரகம என்ற நாராயணன் கோயிலுக்கு ஒரு நிவர்த்தனம (இருநூறு சதுரமுழம்) அளவுள்ள நிலததைத் தானம கொடுதத சாசனம் அகபபட்டிருக்கிறது இதுதான தெனனிநதியாவில கோயிலுக்குக கொடுததாக அகபபடட சாசனஙகளில மிகபபழையது இதனை கிபி மூன்றும நூறறுண்டிலேயே தெனனிநதியாவில விஷ்ணு கோயிலகள இருநதன என்று நிசசயமாயத் தெரிய வரும

இக்காலததில இநதிய சரிததிர ஆராய்சசி செயவோரென்ற சிலர், கோயிலகளும், விககிரகாராதனமும கொஞச காலமாயத் தான் நமமுடையதேசததில உணடாயப பரவின எனறு எழுதியிருக்கிறாகள இது சரியலல ஆரிய வேளவிகளைபபறறியே சொலலும வேதஙகளிலும, வேதததைச சாாநது பிறநத நூறகளிலும, கோயிலகளைபபறறிச சொலவதற்குக் காரணமிலலை கோயிலபூஜை ஆகம நூறகளைப பின்பறறிப பிறநதது இவவாகம நூற்கள பிறநத காலம இன்னதென்று தெரியாது அன்றியும கி மு 5, 6 நூறறுண்டுகளுககு முன்னல உணடான நூறகளில விக்கிரகஙகளைபபறறிச சொலலியிருக்கிறது உதாரணமாக, வடமொழி இலக்கணத்தைச சூததிரமாயச செய்த பாணினியினது காலததில சிறு விக்கிரகங்களை வீடுகளில பூஜைக்கு மக்கள வைத்திருந்ததாகத தெரியவருகிறது, எனெனில, பாணினி சூததிரமொன்றில, 'சிவ' எனனும மொழி, தோடுடைய செவியன விடையேறுவோனுகிய சிவபெருமானையும், 'சிவக' எனனும் மொழி அக்கடவுளது விக்கிரகத்தையும் குறிக்குமெனறு குறித்திருக்கிறது. விக்கிரகாராதனை எவவளவு பரவி

யிருந்தால் அதைப்பற்றி மொழி இலக்கணத்தில் குறிக்க இடமுண்டாகும்? இது நிற்க, கி. மு. நான்காம் நூற்றாண்டின் இறுதியில் மகத ராஜ்ஜியத்தில் ஆளத்தொடங்கின மௌரிய அரசர்கள் புதிய விக்கிரகங்களைச் செய்வித்து, புதிய கோயில்களைக் கட்டி உற்சவங்களை நடத்தி காணிக்கைகள் வாங்குவதால் மிகுந்த செல்வம் தேடினார்கள் என்று மகா மந்திரி சாணக்கியன் இயற்றின அர்த்த சாஸ்திரத்திலிருந்து விளங்கும் ஆகையால் ஈராயிரத்தைந்நூறு வருஷங்களுக்கு முன்னரே பலவித கோயில்கள் இந்நாட்டிலிருந்தன வென்பதற்குத் தடை யொன்றுமில்லை. எனினும் அக்காலத்திய கோயில்கள் சின்னஞ்சிறியவைகளாய்த் தான் இருந்திருக்க வேண்டும் இப்போது கர்ப்பக்கிருகம் என்பதை விடப் பெரிதாய் கோயில் இருந்திராது என்று நினைக்கலாம்

## மக்கள் நிலை

அக்காலத்துத் தமிழ் மக்கள் பணக்களிப்பு மிகுந்து, நல்லுண்டி உண்டு, மகிழ்ச்சியுடன் வாழ்ந்ததாகத் தெரிய வருகிறது முடத்தாமக் கண்ணியார் என்னும் புலவர் கரிகாலனைக் குறித்துப் பாடிய **பொருநராற்றுப் படையில்** அவ்வேந்தன் பாணரைப் போற்றின வகையைச் சொல்லி யிருக்கிறார். அதைக் கவனித்தால் மக்கள் நிலை செவ்வையாய்ப் புலப்படும் பாணர் என்பார் இசை பாடுவோர் யாழைத் தூக்கிக்கொண்டு மன்னரிடம் மரியாதை பெறுமாறு போவர் அரசர் அவரை அருந்தோழரைப் போல் பேணுவர். மேற்கூறிய நூலில் பாணர் சொல்கிறார் — அறுகம்புல்லால் திரித்த பழுதையைத் தின்ற செம்மறிக்கிடாயினது அழகியதும், பருத்ததுமான தொடையினது மேல்பாகத்தை நெகிழ வெந்

தத்தனை விழுங்கு என்று பன்முறை அரசன் சொன்னான். இருப்புக் கோலில் கொழுத்த இறைச்சிகளைக் கோத்துச் சுட்ட கொழுவிய பெரிய தசைகளை வாயிட்டதே இடது புறத்திலும் வலது புறத்திலும் ஒதுக்கி வெம்மையை ஆற்றித் தின்று, புழுக்கின இறைச்சியையும் சூட்டிறைச்சியையும் யாங்கள் இனி வேண்டோம் என்றோம். பின்பு வெவ்வேறு வடிவினையுடைய இனிய பண்ணியாரம் கொண்டு வந்து அவற்றைத் தின்னும்படி எங்களை யிருத்தினான். சுருதி குறையாத சிறிய யாழைத் தத்தாங்கி. ஒள்ளிய நுதலினையுடைய பாடியாடுவோர் பத்தளத்தினது தாளத்திற்குப் பொருந்த ஆடும்படி. மகிழ்ச்சி தரும் கள்ளை உண்டு தலைவனைப் பல நாளைப் போக்கினேம். ஒரு நாள் சோற்றைக் கொள்வாயாக என்று வேண்டிக் கொண்டான். முல்லை அரும்பு போல வரியற்ற இடைமுறியாத அரிசி விரலெனும்படி நீண்டு ஒன்றோடொன்று சேராத சோற்றையும். பாலைப் பொரித்து அதனோடு கூட்டிய பொரிக்கறிகளையும், புளிக்கறிகளையும் கழுத்து வரையில் நிரம்பும்படி விழுங்கினேம். அரசனை விட்டு இனிதாக இருந்து, இரவும் பகலும் இறைச்சியைத் தின்றதால் எங்கள் பற்கள் கொல்லை நிலத்தே உழுத கொழுவை ஒப்ப முனை மழுங்கி, இளைப்பாற இடம் பெறாதே இவ்வுணவுகளை வெறுத்தோம். இனி மீண்டு எம்முடைய பழைய ஊரிடத்தே செல்வோம் என, யானைக் கன்றுகள், ஊர்திகள், ஆடைகள், அணிகலங்கள், முதலியவற்றை வாரிக்கொடுத்தான்

பிசிராந்தையார் என்னும் புலவர் சோழநாட்டின் நிலையைப் பற்றிப் பின் வருமாறு சொல்கிறார்:— சோழ நாட்டில் உள்ள களமர்கள் அரித்து வடித்த, முதிர்ந்த

விரும்பத்தக்க கள்ளை ஆமையிறைச்சியுடன் உண்டு, களிப்பார்கள். கொழுப்பு நிறைந்த ஆரல்மீனைச் சுட்டுப் பக்குவப் படுத்தி, கன்னத்தில் அடக்கிக்கொண்டு, கள்ளுண்ட மயக்கத்தினால் மயங்கிக் கிடப்பார்கள். அவ்வூரில் ஒவ்வொரு நாளும் பெரும் விழாவாய்த்தானிருக்கும். நாளும் புதுவருவாய் வந்து கொண்டேயிருக்கும். பாணர் பசியைப் போக்கும் நல்ல உறையூர் அது.

மக்கள் இவ்வாறு ஊனுடன் கள்ளும் உண்டு, ஆடிப் பாடிக் களித்திருந்தாரெனினும், உலக வாழ்க்கையைத் துறந்த முனிவர் அக்காலத்தில் இல்லாமலில்லை. பத்துப்பாட்டில் முதலாவதான **திருமுருகாற்றுப்படையில்** துறவிகளைப் பின் வருமாறு வருணித்திருக்கிறது — மரவுரியினாலான உடையை உடையவர், அழகிய வலம்புரிச் சங்கினை யொக்கும் வெள்ளிய நரைமுடி யுடையவர், அழுக்கற்று விளங்கும் வடிவுடையவர், மான் தோலைப் போர்த்த சதை வற்றின மார்பினின்று எலும்பு எழுந்து தோன்றும் உடலையுடையவர்; பகல்கள் பலவற்றில் உண்ணாமல் கழித்தவர், நெடுங்காலப் பகையை நீக்கின மனத்தவர், கற்றோராலும் சிறிதேனும் அறியப்படாத அறிவினர், கற்றோருக்குத் தாம் எல்லையாகிய தலைமை யுடையவர், ஆசையையும் கடுஞ்சினத்தையும் போக்கிய தோற்றத்தினை யுடையவர், வருத்தம் ஒரு சிறிதும் அறியா இயல்பினை யுடையவர், துயரமில்லாத தோற்ற முடையவர்.

அக்காலத்தினர் மக்கள் கடமை எது என்று நினைத்திருந்ததைப் பொன்முடியார் என்ற பெண்புலவர் மிக அழகிய முறையாய் ஒரு செய்யுளில் சொல்லியிருக்கிறார் அதன் பொருளென்னெனில்.— குழந்தையைப் பெற்று

வளர்த்தல் என்னுடைய கடமையாகும் குணத்திலும் அறிவிலும் சிறந்த சான்றோனாக ஆக்குதல் தந்தையினுடைய கடமையாகும் வேல் முதலிய ஆயுதங்களைச் செய்து தருதல் கொல்லனுக்குக் கடமையாகும் கல்வி கேள்விகளில் தேர்ந்த ஒருவனுக்கு நல்ல நிலையை அளித்தல் அரசனது கடமையாகும். என் மகனுக்குக் கடமையோ. வேற்றரசர் போர் தொடங்கிய காலத்தில் பிரகாசம் பொருந்திய வாளைக் கையில் தாங்கிப் பகைவர்களது யானை முதலிய படைகளைத் துமித்து வெற்றி பெறுதலாம்

## நாட்டுநிலை

சோழன் கரிகாற் பெருவளத்தானைத் தலைவனாக வைத்துக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடின **பட்டினப்பாலை**யில் அக்காலத்தில் சோணாடு இருந்த நிலையை மனதில் பதியுமாறு பாடியிருக்கிறார். அதிலிருந்து சில விஷயங்களை எடுத்துக் கூறுவோம் — நீர்த்துளியை உண்ணும் வானம்பாடி தேம்பும்படி மேகம் மழையைப் பெய்தலை விட்டு விட்டாலும், தான் மாத்திரம் தவறாமல் காலந்தோறும் குடகுமலையில் புறப்பட்டுக் கடல் செல்லும் காவிரியினது நீர்பரந்து பொன்னைக் கொழிக்கும் தன்மையது சோணாடு அதனது கழனிகளில் குலைகளையுடைய தெங்கும், வாழையும், பனையும், காயையுடைய கமுகும், மணநாறும் மஞ்சளும், இனமான மாமரமும், அடி பரந்த சேம்பும், முளையினையுடைய இஞ்சியும் எப்போதும் விளையும் பசிய கரும்பின் கமழும் பாகைக் காய்ச்சும் கொட்டிலின் நெருப்பின் புகை சுடுகையினாலே அழகு கெட்டு நீண்டநெய்தற்பூ நிலத்தின் மேல் வாடும் நெற்கதிரை



திருச்சிராப்பள்ளி மலை

யுண்ட எருமைக் கன்றுகள் நெற்கூட்டின் நிழலில் உறங்கும் பாக்கங்களில் அகன்ற வீடுகள் உண்டு வீட்டின் முற்றங் களிலே நெல்லை உலரவைத்திருப்பார்கள். சிறுமிகள் அந் நெல்லை கோழிகள் உண்ணாது காவல் காப்பார்கள் கோழி களை ஓட்டுவதற்கு அச்சிறுமிகள் தங்கள் காதில் அணிந்து கொண்டிருக்கும் ஆபரணங்களை வீசி எறிவார்கள் சிறு பையன்கள் மூன்று சக்கரங்களையுடைய தேர்களை உருட்டி விளையாடுவார்கள் அவ்வாறு அந்த தேர்களை அப் பையன் கள் இழுத்துக்கொண்டு வரும்போது பெண்கள் எறிந்த காதணி ஆபரணங்கள் உருளையை உருளாமல் தடுக்கும் சோழநாட்டில் ஊர்கள் ஒன்றிற்கொன்று நெருங்கி யிருக்கும் வெண்மையான உப்பை விற்பனை செய்துவிட்டு அதற்குப் பதிலாக நெல்லை வாங்கி நிறைத்த படகுகள் வரிசையாய் நிற் கும். அப் படகுகள் நிற்பதைப் பார்த்தால் குதிரைகளை வரிசை வரிசையாய்க் கட்டியிருப்பது போன்றிருக்கும் தோப்புகள் பல அங்கே உண்டு. அந்த தோப்புகளையடுத்துப் பூஞ்சோலைகள் உண்டு பலவகையனவான மலர்கள் நிறைந்த தடாகங்கள் உண்டு கதவுகளில் புலியின் வடிவங் கள் செதுக்கி யிருக்கும் மதில்களில் இலக்குமியின் திருவுருவம் தீட்டப்பெற்றிருக்கும் சமையல் செய்யும் இடத்தில் சோறுவடித்த கஞ்சியானது ஆறுபோல பெருகி யோடும் தவ ஒழுக்கத்தையுடைய சமணர் பள்ளிகள் பல வுண்டு பௌத்தர் பள்ளிகளும் பல உண்டு சுங்கங்கொள் வோர் இரவும் பகலும் விழித்திருந்து சுங்கங்கொள்வர். சுங்கச் சாவடிகளில் மூட்டைகளின்பேரில் சோழன் புலி முத்திரையை வைத்து வெளியே அனுப்புவார்கள் இன் னும் இவைகளபோன்ற பல சிறப்புகளையுடையது சோழன் தலைநகராகிய காவிரிப்பூம்பட்டினம்

## இலக்கியநிலை

இம் முத்தற்காலத்துப் பல்லவ மன்னர் பெயராவது, அவரைப்பற்றி யாதொரு மொழியாவது, அக்காலத்துத் தமிழ்ச் செய்யுள்களில் கிடையாது. என்னெனில் வடநாட்டி லிருந்து வந்த பல்லவர் தம்முடைய பிராகிருத மொழியையே மொழிந்து, தம்முடைய ஆரிய நெறிகளையே பின்தொடர்ந் தாரே அன்றி, தமிழ்மொழி கற்றதுமில்லை, தமிழ் பயிலவுமில்லை. தமிழ்க் கவிகளை ஆதரிக்கவுமில்லை. ஆனால் அக்காலத்திலும் அதற்கு முன்னும் தமிழ்க் கவிகளும் ஏனைய நூலாசிரியர்களும் பலர் இருந்தார்கள். தமிழ்வேந் தர் புலவர்களை நண்பர்களாக நடத்தி வந்தாரென்று முன்பே சொன்னோம். இம்மன்னர் அறநெறியைத் தவிர்த்து நடந்தபோது, புலவர் அறிவுமொழிகளால் அவர்களின் தவ றைக்காட்டி, அவர்களுக்கு நன்மதிகூறிச் சீர்திருத்தினார் என்று புறம் என்னும் தொகைநூலிலிருந்து தெரியவருகிறது. இதற்கு உதாரணமாக, கோவூர் கிழார் ஆகிய பெரும்புல வர், சோழன் நலங்கிள்ளியும் நெடுங்கிள்ளியும் போர்புரிந்த காலத்தில் சொல்லிய விஷயம் கவனிக்கத்தக்கதாகும்: உங் கள் இருவரில் ஒருவனாயினும் சேரர்க்குரிய பனம்பூமாலை யைச் சூடிக்கொள்ளவில்லை; அல்லது பாண்டியர்க்குரிய வேப்பம்பூமாலையைச் சூடிக்கொண்டிருக்கவில்லை. இருவ ரும் சோழர்க்குரிய ஆத்திமாலையைச் சூடிக்கொண்டிருக்கின் றீர்கள். அன்றியும் இருவர் போர்புரியும்போது இருவரும் வெல்வது இயற்கையல்ல; ஒருவர் தோல்வியுறவேண்டும். யார் தோற்றாலும் சோழன் தோற்றான் என்ற பெயர் தப்பா மல் வரும். ஆதலால் குடிப்பெயரைக் காக்கும்பொருட்டு போரை ஒழியுங்கள், போரை ஒழியுங்கள், என்று கூறியுள

ளார். இச்செய்தி அரசர்க்கும் அறிஞர்களுக்கும் உள்ள சம்பந்தத்தை நன்குகாட்டும். இதைவிட ஒரு அரசனுக்கு எவ்வாறு புத்தி புகட்டக்கூடும்?

பாண்டிய மன்னர் புலவர் சங்கங்களை ஏற்படுத்திக் கவிகளை ஆதரித்தார். இத்தகைய சங்கங்கள் மூன்று இருந்தன என்று பிற்காலத்திய ஆசிரியர் எழுதியிருக்கின்றனர். முதற் சங்கக் காலத்தில் பிறந்த நூல்களெல்லாம் அழிந்துவிட்டன. அகத்தியர் இயற்றிய அகத்தியம் என்ற இலக்கணத்திலிருந்து சில மேற்கோள்கள் மட்டும் பிற்காலத்திய நூல்களில் அகப்பட்டிருக்கின்றன. அவ்வாறே இடைச் சங்க நூல்களில் தொல்காப்பியமென்ற இலக்கணம் தவிர மற்றவையாவை ஒன்றும் இப்போது அகப்படவில்லை. தொல்காப்பியமும் இப்போது நாம் வழங்கு நூலோ, அல்லது இதைவிட கூடியிருந்ததோ, குறைந்திருந்ததோ என்று நிச்சயமாய்ச் சொல்ல வழி ஒன்றும் இல்லை. கடைச் சங்கச் செய்யுள்களில் பல அகப்பட்டு அச்சிட்டிருக்கிறார்கள். அவைகளில் முக்கியமானவைகள் பத்துப் பாட்டு, அக நானூறு புற நானூறு முதலியவைகள். இவைகள் கி. பி. 400-க்கு முன்னமே பாடப்பெற்றவைகளென்பதற்குச் சந்தேகமில்லை.

வடமொழிச் சொற்கள், அலங்கார சாஸ்திரம், யாப்பு முறை, இவைகளின் உதவியின்றி தனக்குத் தானே தமிழ்ச் செய்யுள் உண்டாய் உயர்ந்தோங்கிற்று. ஆகையால் சங்கச் செய்யுளில் ஆரியச் சொற்கள் சிலவே தான் காணப்படும். திருமுருகாற்றுப்படையில் 317 வரிகளில் 60 வடமொழிச் சொற்களுக்குக் குறைவாக அமைந்துள்ளன

பழைய அகவற்பா, வெண்பா, முதலிய பாக்கள் தமிழிற்கே உரியன ஸமஸ்கிருதத்திற்கு உரியனவல்ல இது தவிர, இப்பழைய காலத்துப் பாட்டுகளில் உவமைகளெல்லாம் இயற்கைப் பொருள்களையே அதிகமாகக்கொண்டே கவிகளை அமைத்தார்கள். இதற்கு உதாரணமாக பொருநராற்றுப்படையில் முடத்தாமக் கண்ணியார் என்ற புலவர் பெண்டிர் அழகைப் பின்வரும் பொருள் தருமாறு பாடியிருக்கிறார்:— ஆற்றில் படிப்படியாய்ப் படிந்து கிடக்கும் கருமணலை யொத்த கூந்தலினையும், பிறைபோன்ற அழகினையுடைய நெற்றியையும், கொலைத்தொழிலையுடைய வில்லை யொத்த புருவத்தினையும், குளிர்ச்சி பொருந்திய அழகிய கடைக்கணணையும். இலவம்பூவின் இதழைப்போன்றிருக்கும் இனிய சொல்லையுடைய சிவந்த வாயினையும், பல முத்துக்கள் வரிசையாய அடுக்கியிருப்பதுபோன்று குற்றமில்லாத வெள்ளிய பல்லினையும், மயிரை வெட்டுகின்ற கத்திரிகையினுடைய துளையுள்ள கைப்பிடியை ஒத்து பொலிவினையுடைய மகரம்போன்று செய்துள்ள காதணியை அணிந்துகொண்டிருக்கும் காதையும். நாணத்தினால் பிறரை நோக்காது தொங்கவிட்டிருக்கும் நன்மை விளங்குகின்ற கழுத்தினையும், அசைகின்ற மூங்கில் போல பருத்துள்ள தோளினையும் அழகிய உரோமத்தையுடைய முன் கையினையும், நீண்டு உயர்ந்த மலையின் உச்சியிலுள்ள காந்தள் மலர்போன்ற மெல்லிய விரலினையும், கிளியின் வாயைப்போன்றிருக்கும் விளங்குகின்ற நகத்தையும், ஓடி யிளைத்த நாயினது நாக்கைப்போன்ற சிறிய அடியினையுமுடைய மங்கை யென்பதாம்

நல்லூர் நத்தத்தனார் எயிற்பட்டணத்திலிருந்து வேலூருக்குப் போகும் வழியைப்பற்றிப் பின் வரும் பொருள் தருமாறு **சிறு பாணாற்றுப் படையில்** சொல்லி யிருக்கிறார் — பசுமை நிறமுடைய அரும்புகளையுடைய அவரை பவழம் போலப் பூக்களை வரிசையாய்ப் பூக்கவும், கரிய அரும்பினையுடைய காயாம் செடிகள் திரண்ட மயிலின் கழுத்துப்போல மலரவும், வளப்பமுடைய கொடியினையுடைய முசுண்டை, நால் நாற்கின்ற கொட்டையைப்போலப் பூக்கவும், கொல்லைகளின் பக்கங்களில் உள்ள நீண்ட வழிகளிலே இந்திர கோபப் பூச்சிகள் ஊர்ந்து செல்லவும், முல்லைக்கொடி படர்ந்த காட்டிடத்தில் குகைகளில் குதிக்கும் அருவியினையுடைய பெரிய மலையிலே சூரியன் மறைந்து அவன் கிரணங்கள் மறைந்த அந்திப்பொழுதைப் பார்த்து வேலாலே வெற்றியுடைய வேலூரைச் சேர

நக்கீரனார் நெடுநல் வாடையைப்பற்றிச் சொல்லுவது — பருவம் பெய்யாத போக உலகெல்லாம் குளிரும்படி, தான்கிடந்த மலையை வலமாக வளைந்து, எழுந்திருந்து கார்காலத்து மழையைப் பெய்ததாக வெள்ளத்தை வெறுத்த கொடிய கோலினையுடைய இடையர், ஏற்றத்தை யுடைய எருமையும் ஆடு முதலிய இனங்களையும் பசுக்களையும் மேட்டுநிலமாகிய முல்லை நிலத்தே மேயவிட்டு, தாம் பயின்ற நிலத்தைக் கை விட்டு, ஊரில் தங்காமல் போவதற்காக வருத்தமெய்தி, காந்தளினது நீண்ட இதழ்களால் கட்டின கண்ணி நீரலைத்தலாலே கலக்கமெய்த, தம் உடம்பில் குளிர்ச்சி வருத்துகையாலே பலரும் கூடிக் கையிலே நெருப்பைக் காய்ச்சி, அதிற்கொண்ட வெம்மையைக் கொண்டு பல்பறை கொட்டி நிற்க, விலங்குகள் மேயலை மறந்தொடுங்க, குரங்கு

குளிர்ச்சி மிக, மரங்களிலே பறவைகள் நாற்றடித்துக் கீழே விழ, பசுக்கள் கோபத்துடன் உதைத்துக் கன்றை நெருங்க விடாதிருக்க, மலையைக் குளிர்ச்சி செய்வது போன்றுள்ள கூதிர்காலத்து நடுயாமத்தே, புல்லிய கொடியினை யுடைய முசுட்டையில் திரண்ட புறத்தை யுடைய வெள்ளிய பூப் போன்ற நிறத்தையுடைய பீர்க்குடனே சிறு தூறுகடோறும் விரிய. வேகமாய் ஓடின நீரினின்றும் ஒரு கால்வாயின் வழியே கயல்கள் ஆற்று நீர்க்கு எதிரே வருகையாலே. மழையாலே வருந்தி அது சிறிது விட்டவுடனே எழுந்த பசிய காலையுடைய மெல்லிய சிறகையுடைய கொக்குத் திரள் சிவந்த வரியினையுடைய நாரைகளோடே கரியவண்டலிட்ட சேறு பாய்ந்த ஈரத்தினையுடைய வெள்ளிய மணலாகிய எக விடங்களிலு மிருந்து அக்கயலைத் தின்ன, பொங்குதலை யுடைய வெள்ளிய மேகம் அகன்ற பெரிய ஆகாயத்தே சிறு துளியாகத் தூவ, அழகிய இடத்தையுடைய அகன்ற வயல் நிறைந்த நீராலே மிகக்கொழுந்த வளப்பமான இலையையுடைய நெல்லினின்றும் புறப்பட்ட கதிர் முற்றி வளைய. பெரிய அடியினையுடைய கமுகினது நீல மணியை யொத்த கழுத்திற் கொழுவிய மடலிடத்துப் பாளைவிரிந்த திரட்சியைக் கொண்ட தாறுகளில் தெளிந்த நீரை உள்ளேயுடைய பசிய காய் நுண்ணிய நீர்தான் திரளும்படியாக வீங்கிப் பக்கந் திரண்டு இனிமை கொள்ளும்படி முற்ற. விரவின பூக்கள் நிறைந்த உச்சியினை யுடையன வாகிய அகன்ற சோலை

தாய்மொழியான தமிழைக் கற்காமல், புற நாட்டு மொழிகளில் இயற்கையழகைச் செய்யுளில் செவ்வையாய்ப் பாடியிருக்கிறதே, அவ்வகை தமிழிலுண்டா வென்று சிலர்

வினவுவர். கற்றோரும் கல்லாதோரும் சிற்றூர் கிராமங்களிலிருப்போரும் எப்பொழுதும் கண்டு களிக்கக் கூடிய பொருள்களான கயல், நாரை, நெற் கதிர், கமுகு முதலிய இயற்கைப் பொருள்களை, பிற நாட்டுக் கவிகளை விட 1500 வருஷங்களுக்கு முன்னதாகவே, இத்துணை இனிமையாய்ப் பாடியிருக்கும் தமிழ்ப் பாக்களைத் தமிழர் கற்காமலிருப்பது எத்துணைத் துயரத்தைத் தருகின்றது! பண்டைய காலத்து வடமொழிச் செய்யுளிலாவது, இக்காலத்து ஐரோப்பியச் செய்யுளிலாவது, இத்தகைய வருணனை யுண்டோ?

## [கி பி 400 முதல் 600 வரையில்]

## (தெலுங்கு நாடு ஆண்ட பல்லவர்)

இந்த இருநூறு வருஷங்களில் பல்லவர் பலம் தமிழ் நாட்டில் குறைந்து தெலுங்கு நாட்டில் ஓங்கியிருந்தது. அந்நாட்டை மூன்று பகுதிகளாகப் பிரித்திருந்தார்கள். அவையாவன, நெல்லூரைத் தலைநகராயக் கொண்ட முண்டராஷ்டிரமும், ஒங்கோலைத் தலைநகராயக் கொண்ட கம்மராஷ்டிரமும், உப்பு வெல்லூரைத் தலைநகராயக் கொண்ட வேங்கோராஷ்டிரமுமாம். இவ்விரு நூற்றாண்டில் ஆண்ட பல்லவமன்னர் சரித்திரங்களையும் தாமிரப் பட்டயங்களிலிருந்து தான் அறிய வேண்டியிருக்கிறது. இந்தச் சாசனங்களெல்லாம் புண்ணிய காலங்களில் பிராமணர்களுக்காவது, தேவாலயங்களுக்காவது அரசர் செய்த தானங்களைக் குறிப்பனவேயாம். அகப்பட்டிருக்கின்ற இவைகளெல்லாம் ஸம்ஸ்கிருதத்தில் எழுதியிருப்பவைகள். பிராகிருதத்தில் இராஜாங்க சம்பந்தமான உத்தரவுகளை எழுதுகிற வழக்கம். கி பி மூன்றாம் நூற்றாண்

டியிருந்து இந்தியா தேசத்தில் ஒழிந்தது தெலுங்கு பாஷை அப்போது சீர்திருத்த மடையாததால் இலக்கியத்தில் அதை வழங்கவில்லை ஆகையால் கி பி 400 முதல் 600 வரையில் பிறந்த பல்லவ சாசனங்கள் எல்லாம் வடமொழியிலே எழுதியவைகள்

இவ்வாறு தெலுங்கு நாட்டை ஆண்ட பல்லவ அரசர்களில் மிக்க மகிமை பெற்றவர்கள் கி பி 437 முதல் 459 வரையில் ஆண்ட ஸிம்மஹவர்மனும், கி பி. 570 முதல் 600-வரையில் ஆண்ட நரஸிம்மஹ விஷ்ணுவும் ஆவர் ஸிம்மஹவர்மனே அக்காலத்திலிருந்த மன்னரில் உயர்ந்தவனாக எல்லோரும் எண்ணியதால் இப்போது மைசூர் என்று பெயர் வழங்கும் நாட்டில் அப்போது இராஜ்ஜியஞ் செய்த மேற்குக் கங்கையர் குலத்தரசன் ஆரியவர்மன் என்பான் பட்டாபிஷேகம் அடைய விரும்பினபோது, ஸிம்மஹவர்ம மகாராஜா கிட்டவிருந்து சிம்மாசனம் ஏற்றுவித்துப் பட்டாபிஷேகம் நடத்துவித்தான்

ஸிம்ஹவர்மனது தந்தை விஷ்ணுகோபவர்மன் இவனது சேனாதிபதியான விஷ்ணுவர்மன் முண்டராஷ்டிரத்தில் உள்ள கந்துகூர் கிராமத்தில் ஒரு விஷ்ணு கோயில் கட்டுவித்தான் அக்கோயிலுக்கு விஷ்ணு கோபவர்மன் உருவபள்ளி கிராமத்தில் 200 - நிவர்த்தனம நிலத்தைத் தானம் செய்தான் அந்தத்தான சாசனத்தைப் படித்துப் பார்த்தால், பல்லவர் அரசாட்சி முன்போலவே குறைவின்றி, தரும சாஸ்திரங்களில் சொல்லியபடி நடந்து வந்ததென்றும், சேனாதிபதிகளும் சர்வாத்தியக்ஷர்களும், வல்ல

---

* நிவர்த்தனம்—இருநூறு சதுர முழங்கொண்ட பூமி.

வாகளும் சாசன சஞ்சாரிகளும் தங்கள் தங்கள் வேலைகளைச் செவ்வையாய்ச்செய்து வந்தனரென்று தெரிகிறது. அன்றி ஒவ்வொரு கிராமத்திலும் உள்ள நிலங்களை அளந்து இராஜாங்கக்கணக்குகளில் சீராய் எழுதிவைத்திருந்தாரென்று காட்ட, உருவப்பள்ளி சாசனத்திலிருந்து சில வாக்கியங்களை எடுத்துத் தமிழ்ப்படுத்திக் காட்டுகிறோம் "உருவப்பள்ளி கிராமத்தில் 200 நிவர்த்தனம் நிலம் உண்டு. இதற்கு எல்லைகளாவன.—மேற்கில் கந்துகூர் கிராமம் எல்லை தெற்கில் சுப்பிரயோக நதி எல்லை. கிழக்கு எல்லையாவது, தென் கிழக்கு மூலையிலுள்ள பெருஞ்சாலைப் பக்கத்தில் ஒரு பாறையுண்டு; பாறைக்கு வடக்கு நோக்கிச் சென்றால் ஒரு புளிய மரமுண்டு; அதிலிருந்து வடக்கு நோக்கிச் சென்றால் கருப்பூர் கிராமத்துக்கும் கந்துகூர் கிராமத்துக்கும் போகும் வழியின் பக்கத்தில் ஒரு பாறை யுண்டு. அங்கிருந்து வடக்கேபோனால் கருப்பூர் கிராமத்து அந்தணர்கள் வயல்களுக்கு எல்லையில் ஒரு பெருங் கல் உண்டு, அதற்கு மேற்கே சென்றால் கொண்டமுருவுடு கிராமத்து எல்லை வந்து சேரும்" இவ்வளவு நுட்பமாய் நான்கெல்லையைச் சாசனத்தில் எழுதுமாறு இராஜாங்கக் கணக்குகள் எவ்வளவு ஏற்பாடாய் இருக்கவேண்டுமோ என்பதை ஆலோசித்து அறிய வேண்டும்.

கி. பி. ஆறாவது நூற்றாண்டு பிறக்குமுன்னரே சோழரைக் காஞ்சிபுரத்தினின்று போக்கடித்துப் பல்லவ மன்னர் மறுபடியும் கச்சிநகர்க் காவலர் ஆயினர். இவர்களில் நரஸிம்ஹவிஷ்ணு என்பவனைப் பிற்காலத்தியார் பின்வருமாறு போற்றினர்.—"காடுகளைப்போல அடர்ந்து

விளைந்த வயல்களையும், பிரகாசமான கமுகுத் தோட்டங்களையுடைய நகைகளால் அணிந்த கவேரன் பெண்ணான காவிரியால் அழகுபெற்ற சோழநாட்டை விரைவாய்க் கைப்பற்றினான்", "அவனிஸிம்ஹனென ஸிம்ஹவிஷ்ணு எப்போதும் பகைவரை அழித்து, மலய, களப்பிர, மாளவ, சோழ, பாண்டிய அரசர்களையும், தனக்குப் புஜபலமே அதிகம் என்று இறுமாப்புப்பெற்றிருந்த சிம்மள அரசனையும் கேரளரையும் ஜயித்தான் இவ்வாறு புகழ் பெற்றதனால் நரஸிம்மவிஷ்ணு பல போர்கள் புரிந்து, பகைவரைத் தோற்கடித்து, பல்லவர் பராக்கிரமத்தைப் பலரும் போற்றுமாறு பரவச்செய்தான் என்று அறிய வேண்டியது.

இவ்விரு நூற்றாண்டுகளிலும் வாழ்ந்த பல்லவ மகாராஜாக்கள் எல்லோரும் விஷ்ணு பக்தர்கள். அப்போது வைஷ்ணவர்களைப் பாகவதர் என்றும், பகவான் என்பது ஸ்ரீமந் நாராயணனுக்கு விசேஷமாய் வழங்குவதால், சூரிய மண்டலத்துக்கு நடுவில் கமலாஸனத்தில் கேயூர, மகர குண்டலங்களைப் பூண்டு கிரீடம், ஹாரம், பொன்மய உடல் சங்கு, சக்கரம் இவைகளால் பொலிந்து வீற்றிருக்கும் மகாவிஷ்ணுவை வழிபடுவோர்க்குப் பாகவதர் என்று நாமம் பிறந்தது. இந்தப் பல்லவர் சாசனங்களில் முதல் மொழிகள் 'ஜிதம் பகவதா,' அதாவது 'பகவான் வெற்றிபெற்றார்', என்றிருக்கும் அன்றியும் இப்பல்லவ அரசர்களைப்பற்றி பகவத் பாதங்களை எப்போதும் தியானம் செய்பவர்களென்றும், பரம பாகவதர்களென்றும் சாசனங்களில் கூறியிருக்கிறது. இதுவுமன்றி அவர்கள் 'அநேக கிருது,' 'சதக்கிருது' என்றும் பெயரிட்டிருப்பதால், இவர் பக்திமார்க்கம்

அன்றி, கருமமார்க்கத்தையும் கைப்பற்றி வைதிக யாகங்களைப் பலவற்றை நடத்தினரென்று அறியலாம். இவையுமன்றி, தேவர்களுக்கு ஆகாரம் சமர்ப்பிவித்து இருபிறப்பாளரையும், குருவினரையும், கிழவர்களையும், ஆதரித்துப் பசு, பொன், நிலம் முதலியவற்றை அடிக்கடி தானம் செய்ததாகவும் எழுதியிருக்கிறது. ஆகையால் இப்பல்லவ வேந்தர் ஆரிய முறைகளை அதிகமாக இந்நாட்டில் பரவச்செய்தாரென்று தெரியவருகிறது. ஆயினும் இவர் கட்டுவித்து, தானங்கள் கொடுத்து விளங்கச் செய்த கோயில்கள் மரத்தாலும், செங்கல்லாலும் கட்டியவையாகையால் சீக்கிரத்தில் இடிந்து போய் இப்போது அவையிருந்த அடையாளமும் இல்லாமற் போயின.

## அக்காலத்தில் ஆண்ட மற்றைய மன்னர்கள்

கரிகால் பெருவளத்தான் இறந்தபின், சோழர் செல்வாக்கு கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்தது. மணிமேகலையில் கரிகாலனுக்குப் பிறகு இருசோழர் அரசியில் ஆண்டதாகச் சொல்லியிருக்கிறது. பின்பு சோழர் வலி குன்ற அவர்கள் முதலில் காஞ்சிபுரத்தை இழந்தார்கள். பின்பு உறையூரிலும் அவர் ஆட்சி தடுமாற ஆரம்பித்தது. பின்பு சோழநாட்டை ஆறாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் வாழ்ந்த புத்தவர்மன் என்னும் பல்லவ அரசன் பற்றிக்கொண்டான். இப்புத்தவர்மனுக்கு 'சோழ சைந்யார்ணவ வாடவாக்னி' அதாவது 'சோழர் சேனையெனும் கடலுக்கு ஊழித்தீ' என்ற புகழ்ப்பெயர் உண்டாயிற்று. சோழநாட்டினின்று அப்புறப் படுத்தப்பட்டு, சோழத் தலைவர் தெலுங்கு நாட்டின் ஓர் பகுதியான கடப்பை ஜில்லா பிராந்தத்தில் ஆளத்

தொடங்கினா இதனைத் தொடர்ந்து நாட்டுச் சோழரும கரிகாலன வமசததைச சேரநதவரெனறே தஙகள தாமரப படடயஙகளில தஙகளைப பறறிச சொலலிககொணடிருககிறாகள சோழா அரசாடசியிலிருநது திருசசிராபபளளி, தஞசாவூா ஜிலலாககள எனறு இபபோது பெயருளள நாடு நழுவி, பலலவரது ஆறறலுமம. சோழநாடு எனற பெயா அதறகு இருநதுகொணடே இருநதது

கரிகாலன காலததுககுப பினபு பாண்டியா, சேரரது செலவாக்கு உயாநதது. அவருள நெடுஞ்செழியனெனனும பாணடியனே தலையாலஙகானத்தில போா வெனறதினலை தலையாலஙகானததுச செரு வெனற நெடுஞசெழியனென்று கூறுவா இவன ஒரு பெரிய வீரன பகைவாகளை அடக்கும ஆறறலுடையவன செஙகோல வழுவாத கீாததியுடையவன். கலவியில கருததுடையவன கறறவாகளால பாராடடப் பெறுதலை விழைநதவன் சொல் நயம, பொருள ஆழம அமைநத கவிபாடும பண்பினன. தலையாலஙகானத்தில சேரமனனரோடு கடுமபோா புரிநது வெறறி கொணடான் பல குறுநில மனனாகளையும் போரில வென்றான். அக்காலததில சிறநது விளஙகிய பெரும புலவராகிய மாஙகுடி மருதனாரால, 'மதுரைக்காஞ்சி' யெனற அரிய நூலில பாராட்டபபெறும் பேறறைப பெறறவன. குடபுலவியனா என்ற புலவா இபபாண்டி மன்னனைப்பாாததுக் கூறும் செய்தி பாராட்டத்தக்கதாம 'உணவு கொடுததவா உயிர் கொடுததவா. உணவின்றேல உடலில்லை. உணவாவது நிலத்தோடு நீர்கூடி விளைவதாகும் அத்தகைய நீரையும் ஒரு சேரக் கூட்டினவர்கள் இவ்வுலகத்தில் உடம்பையும், உயி

ரையும் படைத்தவராவர். நெல்லை விதைத்துவிட்டு மழையை நோக்கியிருப்போரது நிலம் எவ்வளவு விரிந்ததாயிருந்தாலும் அதனால் அரசன் ஆட்சிக்கு அதிக பயனில்லை. ஆதலால் நிலம் குழிந்துள்ள இடத்தில் நீரைத் தேக்கு அங்ஙனம் செய்தவர் தங்கள் பெயரோடு அறம்பொருள் இன்பம் என்ற மூன்றுஞ் சேர்ந்து கிடக்கும்' இவ்வரிகளை நோக்குங்கால் அறிஞர்கள் அரசர்க்கு எடுத்து உரைக்கும் விஷயத்தின் உயர்வும், அரசர் அதைக்கேட்கும் பான்மையும் புலப்படும். உழவிற்கு இன்றியமையாது வேண்டப்படும் நீரைச் சேகரிக்கும் வகையில் அவர்களுக்கிருந்த எண்ணமும் வெளிப்படையாகத் தோன்றும்.

இவனுக்குப் பின்பு செங்குட்டுவனென்ற சேரன் ஒருவன் பிரசித்தி பெற்றான். சேர மன்னர்களுக்குள் சிறந்து விளங்கியவன் இவன். ஆண்டபோது ஆரியப்போர்தந்தபாண்டியன் பாண்டியநாட்டை ஆண்டுவந்தனன். இவன் காலத்தில்தான் கற்புக்கரசியாகிய கண்ணகி, தமிழ்நாட்டிடைத் திகழ்ந்தனள். கண்ணகி, கோவலன் கொலையுண்ட பின்னர், மதுரையைத் தீக்கு இரையாக்கி சேரநாட்டையடைந்து, மலையின் உச்சியிலேறி தனது கணவனோடு விமானம் ஏறிச் சொர்க்கம் புகுந்தனள். இதைக் கேள்வியுற்ற செங்குட்டுவன், கண்ணகியைப் பத்தினித்தெய்வமாகப் பாராட்டக் கருதி, வடநாடு சென்று இமயமலையில் கல் வெட்டிக் கொண்டு வந்து, கங்கையில் அக்கல்லை நீராட்டி, கண்ணகியின் உருவம் அதிலமைத்துப் பிரதிட்டை செய்தான். இதைக் கேள்வியுற்ற இலங்கையரசனாகிய கயவாகும், கண்ணகியின் திருவுருவத்தைப் பிரதிட்டை செய்தானென்பர். கண்ணகியின் சரிதையாகிய சிலப்பதிகாரத்தைப் பாடியவர் இச்சேரன்

செங்குட்டுவனது தம்பியாகிய இளங்கோவடிகள்தான். இவருடன் உடன்வாழ்ந்த கூலவாணிகன் சாத்தனார் தான் மாதவியின் மகளாகிய **மணிமேகலையின்** சரிதையைக் கூறியுள்ளார். ஆகவே தமிழுக்கு அணியாக விளங்கும் சிலப்**பதிகாரம், மணிமேகலை** என்ற இரண்டு காவியங்களும் இவர் காலத்தில் தான் தோன்றின. இன்னும் இவரது கொடை, செங்கோன்மை, அருள், அன்பு, வீரம் முதலியவைகளைப் பற்றி **பதிற்றுப்பத்து, புறநானூறு** முதலிய நூல்களில் விரிவாகக் காணலாம்.

மூவேந்தர்களாகிய சேர சோழ பாண்டியர் ஆட்சி சிறிது சிறிதாகக் குன்றின காலத்தில் குறுநில மன்னர்கள் சிறந்து விளங்க ஆரம்பித்தனர். அவர்களுள் இருவர் சரிதையைப் பார்ப்போம். இக் குறுநிலமன்னர்களுள் பல வகைகளாலும் சிறந்து விளங்கியவன் பாரி. இவன் கடையெழுவள்ளல்களில் ஒருவன். இவன் ஆண்ட நாட்டைப் பறம்பு நாடு என்று கூறுவர். இவன் மிகுந்த அருளுடையவன். ஓரறிவு உயிர்களாகிய செடி கொடிகளிடத்திலும் மிகுந்த இரக்கமுடையவனாய் விளங்கினன். முல்லைக் கொடியொன்று படர்வதற்குத் தன் தேரைத் தந்தனன் என்று **சிறுபாணாற்றுப்படை** யென்ற நூல் கூறும். இவன் தனது நாடு முழுவதையும் அறிஞர்கட்கும், வறிஞர்கட்கும் கொடுத்து உதவினன் என்பர். இவனிடத்தில் பொறாமை கொண்ட தமிழ் நாட்டு மூவேந்தரும் இவனை வஞ்சனையால் கொன்றனர் என்பர். இவர்க்கு உயிர்த்தோழராய் விளங்கியவர் கபிலர் ஆவர். இக் கபிலர் பாரியைப் பற்றிப் பாடிய பாட்டுகள் பலவுண்டு. இம் மன்னர்க்கு இரண்டு புத்திரிகள். அவர்களை அங்கவை சங்கவையென்பர். அவர்களும் அறிவில் உயர்

ந்து கவிபாடும் சந்நிதியைப் பெற்றிருந்தனர். சைவ சமயத் தலைவராகிய சுந்தரமூர்த்திகளும் இப்பாரி மன்னனைத் தமது அரிய தேவாரத்தில் பாராட்டியிருக்கின்றார். ஆதலால் இவரது பெருமையை அளவிட்டுக் கூறுதற்கு அரிது.

இப்பாரியைப் போன்றே சிறந்து விளங்கிய மற்றொரு குறுநிலமன்னன் அதியமான் நெடுமானஞ்சி ஆவன். இவன் ஒரு சிறந்த வீரன். சேரமன்னர்க்குச் சிறந்த உறவினன். வாழ்நாளை நீட்டிக்கக்கூடிய கருநெல்லிக்கனியை ஔவைக்கு அளித்தவன் என்று புலவரால் பாராட்டப் பெற்றவன். இவன் ஊர் தகடூர் ஆகும். இவன் மகனை பொகுட்டெழினி யென்பர். இவனைப்பற்றி ஔவையார் பாடிய பாடல்கள் மிகவும் சுவையுடையனவாகும். இவனது உயர்வைக்காட்டும் பாக்கள் பல புறநானூறு என்ற நூலில் உண்டு.

## சமயநிலை மாறுபாடுகள்.

இவ்விரண்டு நூற்றாண்டுகளில் சமணநெறியும், பௌத்தநெறியும் தமிழ் நாட்டில் அதிகமாய்ப் பரவி தேசமெல்லாம் நிரம்பின. சமணர், பௌத்தர் கொள்கைகள் தமிழரது பண்டைய முறைகளுக்கும், அந்தணரது வைதிக கருமங்களுக்கும் எதிரானவை. தமிழர் கிடாவை அறுத்து அவர் தொழும் கடவுளர்க்குப் பலியிட்டார்கள். அந்தணர் யாகங்களில் விலங்குகளைக் கொன்று, அவைகளின் வபையை யெடுத்து அக்கினி முகமாய்த் தேவர்கட்குச் சமர்ப்பித்தார். இவ்வாறு செய்யும் தொழு முறையைக் கருமநெறியென்பர். சமணரும், பௌத்தரும் அறநெறி என்பதில் நடப்பவர். சிலப்பதிகாரத்தில் சமண முனிவரைப் பற்றி ஊனைத்துறந்து

பொய் கூறுமையாகிய விரதத்தோடு பொருந்தி அழுகக்காறு. அவா முதலியவற்றைக் கைவிட்டு, அறநூல முதலியவற்றை யறிந்து ஐம்புலனை யு படக்கிய கோட்பாடடையுடையவராய், உண்மை வகையணாநத சீரியோா என்று சொலலியிருக கிறது

சீவகசிந்தாமணியில் ஒரு சமணனுக்கும் ஒரு குறவா தலைவனுக்கும் நடந்த பின்வரும் வாதம் சமணா கொளகை களைக் காட்டும்.

குறவன் — ஆண பனறியோட எயபபனறியையுங கொனறு சமைதத புழுங்கலைத தேனை மிக வாாததுத தினறு. பினபு நெலலாலாககின களளையும் உணபோம

சமணன் —முற பிறபபில ஊன முதலியவற்றை யுணடு, உயிரையும் கொனற டாவததாலே இவவிடத்து எயினாாயப பிறநதது. இனி இவற்றைக் கைவிடுமின

குறவன்:—பலரும் நனறெனறு கூறும் கள முதலியவற றைக் கைவிட்டால யாஙகள் எஙஙனம பிழைபபோம? எம முடைய உடமபை நீ வாடட வேண்டாம். ஒழிநத உடபபு களை வாட்டுவாயாக.

சமணன் ஊனைச சுவைததது உடமபை வளாததது நரகத்தில உறைதல நன்றோ? ஊனைத தினனுதே உடலை வாட்டித தேவராயுறைதல நனறோ? கடைபபிடித்து இவ விரண்டினுளளும் நலலது நீ கூறு.

குறவன். ஊனைத் தவிர்த்து தேவனுதலே உறுதி.

சமணன். நீ உறுதியுணாநது கூறிஞயாதலின, எடா! இனி உயாகதியிலே போவை இறைவனாலிற காணபபடுவது. கொலலா விரதத்தோடே ஊனை துறத்தலுந்தான். ஆதலின காட்டிற கிழஙகை யுணணவே இனறே இன்ப வெளளததைச சோநதாய இவவொழுக்கம் நினககு இறுதிககள பேரினபஞ் செறியுங கனியாகும குறிக்கொள.

பெளததா சமயம சமணாதுபோல கொலலா விரதம முழுவதும ஒபபினதலல ஊனை அடியோடே அவா விடவிலலை சமணாது அறநெறியை மாததிரம பெளததாகள தொடாநதாாகள. அவாகளது முககியமான கொளகைகளாவன:—ஆசையால துக்கமுணடாகும ஆசையால வேட்கையை வெறுபபதே மககட்குக் கடமை அவா எனபது எலலா உயிாக்கும எஞஞானறும பிறபபீனுமவிதது இநத விததை எரிததுவிட்டால மறுபிறபபறறு நிாவாணம எயதலாம நிாவாணமெனபது தனிததுப பாாததுப பறறறுத்திடுதல. நறகதி வராதிருததலுக்குக காரணம குறறம குறறமென கூறபபடுவன அவா. பறறு. பேதைமை என்பவை.

பெளத்தா நீதிகளை இளஙகோவடிகள கணணகி, கோவலன் சரித்திரததைக் கூறும் முகததால தொடுததுக் கூறியுளளார் அவைபாவன —பிறவுயிாகளுக்குத் துன்பஞ் செய்யாதீாகள, தெயவமுண்டெனறு தெளியுஙகள. அவவாறு தெளிந்தோரைப போறறுஙகள பொய் பேசாதீாகள. கோள சொலலாதீகள் புலால் உண்ணுதீாகள் கொலை புரியாதீாகள் பிறர்க்கு வேண்டுவனவறறைக் கொடுஙகள் பலவகைத் தானதவங்களை இயறறுஙகள் ஒருவா் செய்த

உதவியை மறக்காதீர்கள் தீய நடையை ஒழியுங்கள். பொய்ச் சாட்சி புகலாதீர்கள் வாய்மையை விடாதீர்கள் நல்லோரை நாடுங்கள் தீயோரை விலக்குங்கள் மரிக்கிற உயிரைக் காப்பாற்றுங்கள். இல்லற தருமத்தைப் போற்றுங்கள். கள்ளையும், காமத்தையும், கள்வையும், பொய்யையும் பயனில்லாத வார்த்தைகளையும் ஒழியுங்கள், பாவியமும், பொருளும், உடலும் நிலைத்திருக்கா. ஆதலால் நாட்களை வீணாக்காது இறுதியில் போக வேண்டிய இடத்திற்கு ஏற்ற துணையைத் தேடிக் கொள்ளுங்கள்

பௌத்த கொள்கைகளுள் மற்றொன்றை கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார் இயற்றிய மணிமேகலையில் உள்ள ஒரு சிறு கதையிலிருந்து காணலாம் ஒரு நாள் மணிமேகலையென்ற மாது சுடுகாட்டில் புலம்பிக்கொண்டிருந்த ஒரு பெண்ணைக் கண்டாள் அவள் தன் குழந்தையின் மரணத்தை எண்ணிப் புலம்பிக்கொண்டிருந்தாள் அவளைக் கண்ட மணிமேகலை மனமுருகிப் பின் வருமாறு கேட்டனள் 'இளங்குழந்தைக்கு எங்கே இருந்து புலம்புகின்றாய்? பூங்கொடி போன்றவளே! பொருந்தாத காரியத்தைச் செய்கின்றனை. உன் குழந்தையின் உடலைக் கருதி வருந்துகின்றாயா? அல்லது உயிரைக்கருதி வருந்துகின்றாயா? உடலுக்காக அழுதாயானால், அவ்வுடலை ஏன் சுடுகாட்டிற்குக் கொண்டுவந்தாய்? இல்லை. உயிருக்குத்தான் கவலைப்படுகிறேன் என்றால், உயிர் எவ்வுடலைப் பெறுமென்று நம் சிற்றறிவால் அறிவதற்கில்லை ஆதலால் அவ்வுயிரிடத்தில் உண்மையாய் நீ அன்பு கொண்டிருந்தால், எவ்வுயிரிடத்திலும் அன்பு கொள்ள வேண்டும்'. சமணமும,

பௌத்த மதமும் எவ்வளவு பரவி யிருந்தன என்று சிலப்பதிகாரத்தைப் படித்தால் செவ்வையாய்த் தெரியும். கோவலனும் கண்ணகியும் காவிரிப்பூம் பட்டினத்தை நீங்கி வரும்போது பல தவசசாலைகளைக் கண்டனர் அவற்றுள் ஒன்று இந்திரனால் நிருமிக்கப் பெற்றது அது ஏழுவிகாரங்களை யுடையது அதனடியில் ஆகாய சாரிகள் மறைய இருந்துகொண்டு ஆகமத்தை ஓதி அதற்குப் பொருள் கூறுவர் இவ்வாகமம் ஓங்கி வளர்ந்துள்ள ஐந்துகிளைகளையும் பசிய இலைகளையு முடைய மாபோதி என்ற மரத்தின் நிழலில் வெழுந்தருளிய தரும சொரூபியாகிய புத்தரால் அருளப் பெற்றது வேறு சிலவிடங்களில் சந்திரகாந்தக் கல்லால் கட்டிய இடங்களுண்டு. இவைகளைப் பிண்டி மரத்தினடியில் கட்டி யிருப்பர் இம்மரமானது பஞ்சபரமேஷ்டிகளாகிய அருகர், சித்தர், உதநிடாபர், ஆசிரியர், சாதுக்கள் என இவர் வாழுந் தெருக்கள் கூடுமிடத்தில் இருக்கும் இவைகளில் பலர் உயர்ந்தவர் இருப்பர் அவர் புலால் உணார் பொய் பேசார் அவா அழுக்காறு முதலியவைகளை ஒழித்து அறநூல் முதலியவற்றை அறிந்து உணர்ந்தவர் ஐம்புலன்களையு மடக்கிய திறமுடையவர் உண்மை உணர்வைப் பெற்றவர்

சமணமும் பௌத்தமும் முதலில் துறவிகள் கொண்டு வந்த நெறிகள். வர வர இத் துறவிகளுக்கு இல்லத்தாரும் சிஷ்யர்களானார்கள் அரசர்களும் செல்வமிகுந்த செட்டிகளும் இந்நெறிகளைப் பின் தொடர்ந்து பெரும் மடங்களைக் கட்டினார்கள். கட்டி முனிகளை ஆதரணை அதிகமாகச் செய்யவே, துறவிகளும் அறநெறியி லிருந்து நெகிழ்ந்தார்

கள் சாதாரண ஜனங்களுக்கும் கரும மார்க்கம், பக்தி மார்க்கம், இவைகளிலுண்டாகும் மன உருக்கம் ஞானமார்க்கத்தில் உண்டாகவில்லை. விஷ்ணுவையும் சிவனையும் தொழுது போற்றல் மனத்துக்குக் குதூகலத்தை உண்டுபண்ணும் முறையாகும். சிவனது திருவிளையாடல்களைப் பற்றிய கதைகளையும், விஷ்ணு தமது திருவவதாரங்களில் நிகழ்த்தின விந்தைகளையும் ஆரிய மொழியில் பிறந்த இதிகாச புராணங்களிலிருந்து சொல்லக் கேட்ட பக்தர்களுக்குப் பக்தி பரவிற்று. சிவ கோயில்களும் விஷ்ணு ஆலயங்களும் தென்னாட்டில் சிறிது சிறிதாய் அதிகரித்தன. பல்லவ சாசனங்கள் பிறந்த காலமுதல் பல அரசர் கோயில்களுக்குத் தானதருமம் செய்துவந்தாரென்று முன்னமே கண்டறிந்தோம். பெரும்பாணாற்றுப்படையியற்றிய இளந்திரையன் காலத்தில் காஞ்சிப்பதியிலுள்ள திருவெஃகாவில் "பாம்பணைப்பள்ளி அமர்ந்தோன்," அதாவது, பாம்பணையாகிய படுக்கையில் துயில்கொண்டோனாகிய திருமாலது கோயில் இருந்ததெனப் பாடியிருக்கிறது. கரிகாலன், காஞ்சிக் கோயிலைப் பொன்னால் புதுப்பித்தானென்ற கதையைக் கண்டிருக்கின்றோம். இப்போது அறநூல்களை வருந்திக்கற்று, ஞான நெறியில் நடக்க முயல்வதைவிட இறுமாப்பற்ற எளிய தொண்டுகளைக் கோயில்களில் செய்வதும், பூசைக்குரிய பொருள்களைத் தேடிக் கொடுப்பதும், கடவுளை இடைவிடாது போற்றுவதும், அவன் திருவடியைச் சேர நன்முறைகளென்ற உணர்ச்சி நாடெல்லாம் நிறைந்தது. நிறைய, அரசர்கள் சிவன் கோயில், விஷ்ணு கோயில்கள் பல கட்டத் தொடங்கினார்கள். இவ்வாறு கோயில் கட்டினவரில் முக்கியமானவன் கோச்செங்கண்ணான் என்னும் சோழ அரசன். இவ்வரசனுக்கு சிவ பெருமானிடத்தி

ளும, திருமாலிடததிலும அதிக பகதி உணடு இவன கடடிய ஆலயஙகள பல ஒரு சிலநதி தான செயத புண ணிய மிகுதியால இவவாறு சிறநத அரசனுகப பிறநதா னென்று புராணஙகள கூறும இவனைச சைவப பெரியோர் தேவாரததிலும, வைணவப பெரியாா பிரபநதததிலும; பாராட்டிக கூறியிருககின்றாகள ஆதலால இவனபெருமை அளவிடற்கரிதாம. இம மனனா காலததிலும, இவருக்கு முநதிய காலததிலும. தமிழ நாட்டில சிவனடியாாகள பல ருணடு. அவாகளுள இருவா கணணபபரும், சணடிகேசுவர ரும ஆவா. கணணபபா. வேட்டுவ குலததிற பிறநது, வேட டையாடச செலகையில காளததி மலையயடைநது, தம முடைய கணணை யெடுததது, அமமலையின மேலுளள சிவ பெருமானுககுச சாததியதால அபபெயரைப பெற்றனா

சணடிகேசுவரா சோழநாட்டில பிராமணா குல பிறநது, தினநதோறும பசுமநதைகளை நதிககு மேயததுச சென்று பாலைக கறந்து, மணலைக் குவிததுச சிவலிஙகமாக அமைதது அபிஷேகம செயது வருகையில. அவா தகப்பனா இதையறிநது அவா செயதுவநத காரியததிறகுக் கெடுதல செயத பொழுது, தகப்பனா காலை வெட்டி, சிவபெருமான் தாளை யடைநதாா

விஷணுவினது சரிதைகள முதலில இராமாயணம மகா பாரதம என்ற இதிகாசஙகளில வடமொழியில முறை யே வால்மீக முனியும, வியாசமுனியும எழுதி, உலகததாா உணாந்து உவக்குமாறு ஈந்தாாகள. பின்பு பதினெண் புராணங்களில சில விஷ்ணு பரமாயும சில சிவன் பரமாயும் பிறந்தன இந நூலகளில கடவுள கருணையைக் காட்டும்

றைகளை அதிகமாயுள்ளன. விஷ்ணுவையோ, சிவனையோ வழிபட்டு, பூசை செய்ய வேண்டிய முறைகளை ஆகமங்கள் என்னும் வட மொழி நூல்களில் எழுதினார்கள். வைஷ்ணவ ஆகமங்கள் 108; சைவாகமங்கள் 28; இவையன்றி உலகத்தின் தாயான சக்தியைப் பற்றி ஆகமங்கள் 77; எனினும் வட இந்தியாவைப்போல் தென்னிந்தியாவில் ஜகதம்பாள் பூசை பரவவில்லையாகையால் வைஷ்ணவம், சைவம் இவற்றைப்பற்றி இங்கே சொல்லவேண்டியதன்றி சாக்தம் என்ற அரிய நெறியைப்பற்றி விவரிக்க வேண்டியதில்லை. மேற்கூறிய ஆகமங்களைத் தவிர, அவைகளை யொட்டி எண்ணிறந்த கிரந்தங்கள் இம் முறைகளைப் பற்றினவை வட மொழியில் உள. இவையெல்லாம் இரகசியமாகவே உள்ளன. இக்காலத்தில் எளிதாய் அகப்படக்கூடியவை 4 5, விட அதிகமில்லை. அச்சிட்டவை இன்னும் குறைவு. இவைகளைத் தமிழில் மொழிபெயர்க்கவுமில்லை. இவைகளைக் கற்றறிந்தவர்கள் அந்தணரிலும் அரிதே. மற்றவர்களில் பெரும்பாலார் இத்தகைய நூல்கள் இருக்கின்றனவென்று கூட அறியார்.

ஆகம நூல்கள் கிரியை, சரியை, யோகம், ஞானம் என்று நான்கு பாதங்களாகப் பிரிந்துள்ளன. கிரியை என்றால் கோயில் கட்ட அஸ்திவாரம் போடுவதற்காக நிலத்தை உழுதல் முதலாக கட்டி முடியும் வரைக்கும் செய்ய வேண்டிய காரியங்களை யெல்லாம் விவரிக்கும் பாதம். சரியை யென்னும் பாதமானது கோயில்களில் நடக்க வேண்டிய நித்திய நைமித்திக பூஜைகளைப் பற்றிச் சொல்வது. யோகத்தில் தியானம் செய்யும் முறைகளும், அவை பயக்கும் பயனும் படிப்போர்க்குத் தெரியுமாறு சொல்லியிருக்கும். ஞா

பாகத்தில் தத்துவங்கள் எவை? அவை எத்தகையவை? என்று காட்டியிருக்கும். பக்தி மார்க்கம் வீடு பெறுவதற்கு எளிதான சாதனம் என்பதிலும், கடவுளின் கருணையாலன்றி மோக்ஷம் பெற வேறு வழி இல்லை என்பதிலும், சைவமும் வைஷ்ணவமும் ஒன்றே. அன்றியும், நித்திய பொருள்கள் மூன்றே, ஒன்றல்ல என்பதிலும் இவ்விரு சமயங்களும் ஒத்திருக்கும். ஆனால் இம் முப்பொருள்களுக்கும் சைவர் பதி, பசு, பாசம் என்று பெயரிடுவர். பதி என்பது சிவன்; அளவற்ற அருளைக்காட்டிப் பசு என்னும் மக்களை வீட்டைப் பெற்று உய்ய உதவி செய்வோன் அவன்; பாசம் என்பது சடம் எனும் அறிவற்ற பொருள்களைக் குறிக்கும். இவை பசுக்களுக்கு இன்பமும் துன்பமும் தருகின்றவை. இவைகளின் கட்டிலிருந்து தப்பிப்போய்ப் பேரின்பம் பெறுவதே பெருமபேறான வீடு. இம்மூன்று பொருள்களுக்கும் வைஷ்ணவ ஆகமங்களில், ஈசுவரன், சித்து, அசித்து, என்று பெயர். ஈசுவரன் என்பது திருப்பாற்கடலில் பாம்பணையில் பள்ளி கொண்டிருக்கும் திருமால், சித்தென்பது ஜீவான்மாக்கள்; அசித்தென்பது சடப்பொருள். சரியை, கிரியை, யோக, ஞானங்களில் சைவாகமங்களுக்கும், வைஷ்ணவாகமங்களுக்கும் பேதம் அதிகம் காணும். முதற் கடவுளுக்கு சைவர் சிவனென்றும், வைஷ்ணவர் விஷ்ணு என்று பெயரிடுவதிலும், அவர் திருவிளையாடலைப்பற்றிச் சொல்லும் கதைகளுள்ளுந்தான் இவ்விரு நெறிகளிலும் வேற்றுமை; கொள்கைகளில் மாறுபாடு அதிகம் காணும். முதலில் பக்தியதிகத்தால் சைவர் சிவனை விஷ்ணுவினும் உயர்ந்தவனென்றும் வைஷ்ணவர் விஷ்ணு சிவனினும் அதிகமென்றும் போற்றத் தொடங்கி,

பின்பு இருதிறததார உளளத்திலும பகை முதிாந்து: இவ விரு சமயததாருககும சணடைகள உணடாயின

வைதிக யாகஙகளும பரவின அதனுல நாட்டில அநதணா அதிகரிததுமலலாமல நானகு ஜாதிகள் எனற வகுபபுகளும் பிறநதன. ஆரியாமுறை பரவுமுன தமிழா, வாழுமிடததைப பறறியும, அதனுல உண்டாகும தொழில வேறறுமையைபபறறியுமே வகுக்கபபெறறிருநதனா நிலம, குறிஞசி எனனும மலை நாடும, முலலை எனற காடும, மருதம் எனகிற நீா நிறைநத பளளததாககும், நெயதல எனகிற கடறகரையும, பாலை எனகிற நீாறற மணற பாஙகுமாக ஐந்து வகுபபுகள கொணடது. இவவகுபபுகளில குடியிருககும் மக்களும முறையே குறவா, இடையா அலலது ஆயா, வேளிா, பரதா, மறவா, அலலது எயினா எனற ஐவ வகையினா குறவா மலைநாட்டுப பொருளகளைக்கொணடு செயயும கைத்தொழிலகளில பயிறசியுடையவா வேட்டையாடுவதிலும தோசசியுளளவா. ஆயா ஆவினம், ஆட்டினம முதலியவறறைப பேணுவா வேளிா வேளாண்மையில சிறந்தவா பரதா கபபல நடததுவதிலும, மீன பிடிபபதிலும் திறமையுள்ளவா. மறவா பாலை நாட்டில திரிந்து கொண்டு, தைரியமும தேகபலமும நிறைநது போாபுரிவதில திறமடைந்து மறததொழிலகளில காலஙகழிபபவா இவ வைவ வகையாா வாழ்நது வசிதத இடஙகளுக்குத் தனிப்பெயர்கள தமிழில உண்டு. குறவா குடியிருப்பது குடி, குறிசசி; இடையரிருபபது சேரி, பாடி; வேளிர் வசிபபது ஊா; பரதர் இருப்பது பாக்கம்; மறவா உள்ள இடம் குறுமபு என்று பெயாகளைப பெறும் இநத ஐந்து பிரிவுகளாயப பிரிந்த மக்கள் அனைவரும ஊனைத்தினபவா கள்ளைக்குடிபப

வர இவ்வாறிருந்த நாட்டில் ஆரியமுறைகள் பரவ, நான் மறையை ஓதி, யாகங்களையும், ஆகமமுறைப்படிப் பூசைகளையும் செய்வோரை அந்தணராகவும், அரசுரிமை பூண்டோரை அரசராகவும், வாணிபம் செய்வோரை வைசியராகவும், ஏனைய தொழில் புரிவோரை சூத்திரரென்றும் பிரித்தனர்.

நான்கு வருணங்களென்ற வகுப்பு முதல் முதல் யாகங்களுக்காகப் பிறந்தது. வேத மந்திரங்களை ஓதி, அக்கினி காரியங்களைச் செய்து, சீலமும், நற்குணங்களும் நிரம்ப இருந்தவர் பிராமணர் என்றும். வாஜபேய அசுவமேதாதி பெரும் யாகங்களைச் செய்வித்துப் பிரஜைகளை ஆதரிப்போர் க்ஷத்திரியரென்றும் வேளாண்மை, வணிகம், ஆவின பரிபாலனம் இவைகளை நடத்திச் சிறு யாகங்களுக்குச் செல்வம் அளித்து நடத்திவைப்பவர் வைசியரென்றும், சேவை மாத்திரம் செய்பவர் சூத்திரரென்றும் வடநாட்டில் மனிதரை நான்கு வருணங்களாக முற்காலத்தில் பாகுபாடு செய்தார். இது வைதிக தருமம் இந்த வைதிக தருமப்பிரகாரம் பிராமண வருணத்தாராய்ப் பிறந்து பிரமசாரி கிருகஸ்த, வானப்பிரஸ்த ஆசிரமங்களை முறையே சார்ந்து பின்னர் சன்னியாசிகளாய் ஞானமார்க்கத்தில் சீராய் ஒழுகி ஞாஞேயமான பின்புதான் மோக்ஷம் பெறலாம் என்பது முடிபு. ஆனால் ஆகமவழியில் உள்ள சைவ, வைஷ்ணவ, சமண, பௌத்த நெறிகளில் நடப்பவர் எச்சாதியில் பிறந்தவரானாலும் வீடு பெறலாம் என்பது ஆகமக் கொள்கை. ஆகையால் தமிழர் ஆகம வழிகளில் ஒன்றைக் கைப்பற்றினரேயன்றி, வைதிக நெறி வட இந்தியாவிற் போல் தென்னிந்தியாவில் அதிகமாய்ப் பரவவில்லை. அரசர் சிலர் மாத்திரம் யாகங்களை நடத்தினராகையால் அவர்களை க்ஷத்திரியராகக் கொண்டாடினர்கள். மற்றையவர்கள் எச்

சாதியாராலும் சிவதீட்சை, விஷ்ணுபக்தி, சமண, பௌத்த துறவறம் இவைகளைப் பின்தொடர்ந்து வீடுபெற முயன்றார்கள்.

## இலக்கிய நிலை.

சமணர் தமிழ் நாட்டில் அதிகமாய்ப் பரவப் பரவ, அவர் தமிழ்மொழி பயின்று அதில் புலவராயினர். வடமொழியிலும் புலமையுள்ளவராகையால், ஆரியம் தமிழில் விஸ்தாரமாய்க் கலக்க இடமுண்டாயிற்று. அன்றியும் மதுரைச் சங்கத்துக்குப் போட்டியாய் விஜயநந்தி என்பான் கி. பி 470-ம் ஆண்டில் சமணர் தமிழ்ச் சங்கம் ஒன்றை ஏற்படுத்தி நடத்தினதாக ஒரு பழங்கதையுண்டு. ஐம்பெரும் தமிழ்க் காவியங்களும் பிறந்தன. இவை—சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி. இவைகளின் பெயர்களைப் பார்த்தாலே கி. பி 400-முதல் 600 வரையில் தமிழில் வடமொழிச் சொற்கள் எவ்வளவு கலந்தன என்று தெரியவரும். இவைகளைத் தவிர பெருங்கதை என்ற பிராகிருத நூலைத் தமிழில் மொழி பெயர்த்தனர்.

கி. பி 400-க்கு முன் பிறந்த தமிழ் நூல்களில் பெரும்பாலும் தனித் தமிழ்மொழிகளே யுண்டு. திருமுருகாற்றுப்படையில் 317-வரிகளில் 60-ஆரியச் சொற்களுக்குக் குறைவாகவே உண்டு என்று முன்னமே சொன்னோம். சிலப்பதிகாரத்தில் ஓரிடத்தில் 13-வரிகளை எண்ணிப் பார்த்ததில் 25-ஸம்ஸ்கிருத பதங்கள் அகப்பட்டன. இதுவன்றி அகப்பொருட்சுவை மலிந்த நூல்கள் குறைந்து, வடமொழிக் காவிய நடையில் எழுதிய செய்யுள்கள் அதிகரித்தன.

இந்த ஐந்து காவியங்களில் சிலப்பதிகாரமும் **மணிமேகலையும்** முன்னரும், **சீவகசிந்தாமணி** பின்னரும், இயற்றப் பெற்ற நூற்கள். சிலப்பதிகாரமும் **மணிமேகலையும்** காதை காதையாயப் பிரிந்துள்ளன; **சீவகசிந்தாமணியோ** இலம்பகங்களாகப் பிரிந்துள்ளது. அன்றியும் முன்னிரு காவியங்களில் உள்ள காதைகள் அகவற்பாவைப்போல தொடர்ந்துள்ளன. திருத்தக்கதேவர் இயற்றிய **சீவகசிந்தாமணியிலோ** ஒவ்வொரு இலம்பகமும் நான்கு நான்கு வரிகளாலான விருத்தங்களாலாயது. இதுவுமன்றி, ஓரிடத்தில் நாகப் படுக்கையில் மாயோன் துயிலுமாறுபோலக் காந்தளைப் படுக்கையாகக்கொண்டு, யானை துயிலும் அழகிய சாரலைப் போலப் பலவை தேசத்தை எண்ணி அதன் நகரிலே புகுந்த படியும் என்றும், வேறிடங்களில் பல்லவதேச மன்னன் போர்புரிந்ததாகவும் இருப்பதால், காஞ்சிபுரத்தை மறுபடி பல்லவர் பற்றிக்கொண்ட பின்புதான் இக்காவியம் இயற்றியிருக்கவேண்டும். **மணிமேகலை** இப்பொழுதுங்கால சோழர் ஆட்சியில் காஞ்சிபுரம் இருந்ததென்று முன்னமே சொன்னோம். ஆகையால் **சீவகசிந்தாமணி** மற்றிரு நூற்களுக்கு நூறு வருஷங்களுக்குப்பின் உண்டானது என்று அறியலாம். இந்தச் **சீவகசிந்தாமணியின்** நடையைப் பின்பற்றியே கம்பன் இராமாயணம் பாடினான் போலும்.

கி. பி. 400-க்கு முந்தி இயற்றிய செய்யுள்களில் இயற்கைப் பொருள்களின் அழகை இனிய முறையாயச் சொல்லியிருப்பதைக் காட்டினோம். இக்காலத்திய காவியங்களிலோ அவ்வாறில்லாமல், வடமொழிக் காவியங்களைப் போல, எளிய எண்ணங்களை அரிய மொழிகளைக் கொண்டும், பலருக்குத் தெரியுமாறு இன்றிக் கற்ற சிலருக்கே தெரியுமாறும், இயற்கைப் பொருள்களுக்குப் பதிலாகச்

செயறகைப் பொருளகளையும், மனததின் பண்புகளைப பொருளகளாயும் பாட ஆரமபித்தாாகள இதறகு உதாரணமாக.—மணியாகிய முகில பழஙகாசெனகிற மின்னை மின்னிப பொனனுகிய மழையைப பெயயின, அரசா வெகுளியாகிய தீவிளியும; அம்முகில அஙஙனம் பெயயாதாயின பொஙகித் தனனை நெருஙகினு ரெலலோரையும் சுடும் எனறு கந்துகன் கருதிய பன்னிரு கோடி பசும் பொன்னைக் குவிதது்த் தாழ்நது கூறினை எனறும், வெயயோன வையயவே பரநது மண்ணக மடந்தை கோலததை மனத்தாலே நோக்கிக் கமலததிலே வணடுகளெனனும் பளளியெழுசசி முரசம ஆரவாரியா நிறபத தன கதிாகளென்னுங கையை நீட்டி அம் மண்மடநதையது இருளாகிய போாவையை நீக்கி உதயகிரியின் நெறறியிலே சோநதான் என்றும், மகளிா சேர்நதவிடத்தே யிருந்து இளமையாகிய கள்ளை யுண்டு அறமுதலியவற்றை அறிதலன்றிப பயன்படாமல மூபபதற்கு முன்னமே இளமைப பருவத்தே தவமும் தானமும் நிகழ்த்துமின், வருத்துகினற நோயாகிய தீயையுடைய உடம சைச சோறுக முன்னே பெயதுகொண்டு உணாவை நொய்யாகக் கூட்டி, ஆறறலைத் துவையாகக் குடித்து அதனை உண்ணுமம் கூறறம உடம்பை நிலைகுலைபபதறகு முனனரே கொடுத்துணமின், நறகுணததை விரும்புமின், உடம்பாகிய சகடததை நடத்தும் பாகா, அசசகடம் தொழில செயது வருந்திய பழுகினும் புதியதோருயிராகிய அசசைக் கொணடுவநது இட்டு ஊாதலொண்ணுதாகலான், அசசகடததைத் தனக்கடைத்த காலமுளளளவும செலுததிய பின்னா இகழ்நதார் பலர்; இனி அஙஙனமனறித் தனக்கடைதத காலத்திற்கு நடுவேயும் தீவினை மிகுதியாய் உள்ளதாகிய இடுமபையாகிய நீரை உடைய ஆறறிலே அசசகடம் அழுந்தா நிற்கும். அஙஙன மழுந்தி உயிராகிய

அச்சு முறிவதற்கு முன்னே அதனால் கோட்டற்குரிய சீலத்தை நமக்குப் பெற்றுப் பயனைக்கொண்டு அதனைச் செலுத்துமின். என்னும் பொருள் தரும் **சீவகசிந்தாமணிப்** பாட்டுகளைப் பார்த்தால் கவிகளது புது மனப்போக்கு தெரியும்.

கி. பி. 400-ம் ஆண்டுக்கு முன் இயற்கைப் பொருள்களைக் கண்டு பாடும் பறவைகளைப் போல உள்ளத்தில் உவப்புமிகுந்து தானே புறப்படும் பாட்டுகளைக் களிப்புடன் பாடின பாணருக்குப் பதிலாக, உலகத்தினது துன்பங்களைப் பற்றியே தியானிப்பதால் வரும் துயரமிகுந்த எண்ணங்களைப் பற்றியே இப்போது செய்யுள்கள் செய்தார். அன்றியும் முன்னைய செய்யுளில் இயற்கை வனப்பே மிகுந்திருக்கும். பின்னையதில் இது மிகக் குறைவு. முன்னையதில் கண்டதைக் கண்டவாறே கூறுவர். பின்னையதில் கண்டதைக் காதைதோடு கலந்து கூறியுள்ளார். முன்னையதில் உள்ள ஒரு உவமையை இன்று உற்று நோக்கினும், அதில் எவ்வாறு கூறியுள்ளதோ அவ்வாறே தோன்றும்; பின்னையதிலுள்ள உவமைகள் மனப்பொருள்களாகவே இருக்கும். இந்த மாறுபாடுகளெல்லாம் வடமொழிக் காவியங்களைப் போலத் தமிழிலெழுதியதால் வந்தனவே.

தமிழிலுள்ள அற நூல்களிலெல்லாவற்றிலும் சிறந்து நிற்கும் திருவள்ளுவர் **திருக்குறள்**. இக்காலத்தில் இயற்றியதாகத் தோன்றுகிறது. பழம் சங்கச் செய்யுள்களைவிட இதில் ஆரிய மொழிகள் அதிகம் சேர்ந்திருக்கும்; அறநெறியும் சமணர் நெறியை யொத்திருப்பதால் திருவள்ளுவரைச் சமணரென்று சிலர் கூறுவர். அதற்கு மறுகாரணம் யாதெனில், கடவுள் வாழ்த்தில் கடவுளை ஆதி

பகவனென்றும், மலர்மிசை ஏகினானென்றும் கூறி, அரன் அரியென்று கூறாது திருத்தலாம் மறந்ததற்கு காரணம், "அவி சொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன் உயிர் செகுத்து உண்ணாமை நன்று" என்று வைதிக கருமங்களை விட அற நெறியை அதிகமாயத் திருக்குறளில் பாராட்டுவது பிறகாலத்தில சைவசித்தாந்த நூற்களை இயற்றிய உமாபதி சிவாச சாரியார் முதலியவர்கள் திருவள்ளுவரைச் சைவரென்றே கொண்டு, இவர்கூறிய மொழிகளையே தங்கள ஞானநூல் களில எடுத்தாண்டிருக்கிறார்கள "அறவாழி யந்தணன்" என்றோரிடத்தில திருவள்ளுவர் கடவுளைக் கூறி யிருப்பதை தரும சக்கரத்தை ஏந்திய திருமால என்று பொருள் கூறி. திருவள்ளுவரை வைஷ்ணவரெனபாரும் உளர். ஆரிய நூல களில சொலலியிருக்கும் புருஷார்த்தங்கள நான்கில, அறம், பொருள், இன்பம என்ற மூன்றையும் கூறி, நாலாவதாகிய வீட்டைப்பற்றித் திருவள்ளுவர் கூறாமல விட்டு விட்டனர். இவ்வாறு விட்டு விட்டதைப பற்றி ஒவ்வொரு சாராரும் ஒவ்வொரு வகைபாயச சொலவர் ஒருகால் தனனுடைய கொள்கைகள் எல்லாச சமயங்களுக்கும் ஒவவும என்று காட்ட அவ்வாறு வீட்டை விட்டு விட்டனர் என்று ஐயுறு வதற்கு இடமாயிருக்கிறது.

இப்போதிருக்கும தொல்காப்பியமும் இக்காலத்தியது போலும் அதிலும் ஆரிய மொழிகள் அதிகம்; அன்றியும, தொல்காப்பியத்தில் திணைகள ஐந்திற்கும் முருகனும், இந்திரனும், வருணனும், திருமாலும், துர்க்கையும் தெய்வங்கள என்று சொல்லியிருக்கிறது. மிகப் பழய தமிழ்ச செய்யுள களில் முருகனைத்தவிர வேறு தேவர்களைப போற்றி னவை பெரும்பாலும் இல்லவேயில்லை. அன்றியும கடவுள சம்பந்தமாய் கந்தழி, கந்துடைநிலை, கடவுள் என்ற மொழி

களை அன்றி, வேறுமொழிகள் பழந்தமிழிலில்லை வட மொழிப் பெயர்கள் பிற்காலத்தில்தான் வந்திருக்கவேண்டும் அன்றியும் தொல்காப்பியன் அந்தணன்; ஐந்திரமென்ற வடமொழி இலக்கணத்தைப்பற்றித் தொல்காப்பியம் இயற்றினன், அதலால் தொல்காப்பியம் இக்காலத்திய தென்று நிச்சயிக்கவேண்டியிருக்கிறது.

---

## அநுபந்தம்.

இப்புஸ்தகத்தின் முதற் பதிப்பில் சங்கச் செய்யுள்களிலிருந்து பல மேற் கோள்களை சேர்க்கப் பெற்றன. இவை சிறுவர்களுக்கு மிகக் கஷ்டமாயிருக்கின்றன வென்று பலர் சொன்னதால் அவைகளை அநுபந்த ரூபமாக இங்கு அச்சிட்டிருக்கிறோம். ஒவ்வொரு மேற்கோளின் பொருளும் ஆங்காங்கே குறித்திருக்கிற பக்கங்களில் எளிய வசன நடையில் எழுதப் பெற்றிருக்கிறது.

### பக்கம் 14 [திருமுருகாற்றுப்படை]

சிறுதினை மலரொடு விரைஇ மறியறுத்து
வாரணக் கொடியொடு வயிற்பட நிறீஇ

நெய்யோடையவி யப்பியை துரைத்துக்
குடந்தம் பட்டுக் கொழுமலர் சிதறி
முரண் கொளுருவி னிரண்டுட னுடீஇச்
செந்நூல் யாத்து வெண்பொரி சிதறி
மதவலி நிலைஇய மாத்தாட் கொழுவிடைக்
குருதி யொடுவிரைஇய தூவெள்ளரிசி
சில்பலிச் செய்து பல்பிரப் பிரீஇச்
சிறு பசு மஞ்சளொடு நறுவிரை தெளித்துப்
பெருந்தண் கணவீர நறுந்தண் மாலை
துணையற வறுத்துத் தூங்க நாற்றி
நளிமலைச் சிலம்பி னன்னகர் வாழ்த்தி
நறும்புகை யெடுத்துக் குறிஞ்சி பாடி

யிடிமிழிசை யருவியோடின்னியங் கறங்க
வுருவப்பல பூததா உய் வெருவரக்
குருதிச செநதினை பரப்பி

பக்கம் 16. [சிலப்பதிகாரம்.]

கூனுங் குறளு மூமுஞ் செவிடு
மழுகுமெய்யாளரு முழுகினராடிப
பழுதில காட்சி நன்னிறம் பெறறு
வலஞ்செயாக் கழியு மிலஞ்சி மன்றமும்
வஞ்சமுண்டு மயறபசை யுறறோர
நஞ்சமுண்டு நடுங்கு துயருறறோ
ரழல்வாய் நாகத்தா ரெயிறழுநதினா
கழலகட்கூளிக் கடுநவைபபட்டோர்
சுழலவந்து தொழத்துயா நீங்கு
நிழலகா னெடுங்கனின்ற மன்றமும்
தவமறைந் தொழுகுந தன்மையிலாள
ரவமறைந்தொழுகு மலவைப பெண்டி
ரறைபோ கமைசசா பிறாமனை நயபபோர்
பொய்க்கரி யாளர் புறங்கூற றாளரென்
கைக்கொள் பாசத்துக் கைபபடுவோரெனக்
காத நான்குங் கடுங்குர லெடுபபிப்
பூதம் புடைத்துணும் பூதச் சதுக்கமும்

ஃ ஃ ஃ

வச்சிரக் கோட்டத்து மணங்கெழு முரசங்
கச்சையானைப் பிடர்த்தலை யேற்றி
வால் வெண்களிற்றரசு வயங்கிய கோட்டத்துக்

கால கொள்ள விழவின் கடைநிலை சாற்றி
தங்கிய கொள்கைத்தரு நிலைக்கோட்டத்து
மங்கல நெடுங்கொடி வானுறவெடுத்து
மரகத மணியொடு வயிரங்குயிற்றிய
பவளத்திரள் காற்பைம் பொன் வேதிகை
நெடுநிலை மாளிகைக்கடை முகத்தியாங்கணும்
கிம்புரிப பகுவாய்க் கிளர்முததொழுக்கத்து
மங்கலம பொறித்த மகர வாசிகைத்
தோரண நிலை இயதோ மறு பசும்பொற
பூரண கும்பத்துப பொலிந்த பாலிகை
பாவை விளக்குப்பசும் பொற படாகை
தூமயிர்க்கவரி சுந்தரச சுண்ணத்து
மேவிய கொள்கை வீதியிற செறிந்தாங்கு

அரசு மேம்பட்டஇய வகநிலை மருங்கி
னுரை சான் மன்னன் கொற்றங் கொள்கென
மாயிரு ஞாலத்து மன்னுயிர் காக்கு
மாயிரத்தோ ரெட்டரசு தலைக்கொண்ட
தண்ணுறுங் காவிரித்தாதுமலி பெருந்துறைப
புண்ணிய நன்னீர் பொற்குடத்தேந்தி
மண்ணகமருள வானகம வியப்ப
விண்ணவர் தலைவனை விழுநீராட்டி
பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்
அறுமுகச செவ்வே ளணிதிகழ் கோயிலும்
வால்வளைமேனி வாலியோன் கோயிலும்
நீலமேனி நெடியோன் கோயிலும்

மாலை வெண்குடை மன்னவன் கோயிலும்
மாமுது முதல்வன வாய்மையின் வழாஅ
நான்மறை மரபிற் றீமுறை யொருபால்
நால்வகைத் தேவரு மூவா றுகணங்களும்
பால்வகை தெரிந்த பகுதித் தோற்றத்து
வேறுவேறு கடவுளர் சாறு சிறந்தொருபால்
அறவோர் பள்ளியு மறவோர் மன்றமும்
புறநிலைக் கோட்டத்துப் புண்ணியத் தானமும்
துறவோ ருரைக்குஞ் செயல்சிறந் தொருபால்

## பக்கம் 19 (பொருநராற்றுப்படை)

தூரா அய துற்றிய துருவை யம்புழுக்கின
பாரரை வேவை பருகெனத் தண்டிக்
காழிற் சுட்ட கோழூன் கொழுங்குறை
யூழி னூழின் வாய வெய்ய தொற்றி
யவையவை முனிகுவ மெனினே சுவைய
வேறு பல்லுருவின் விரகு தந்திரீஇ
மண்ணமை முழவின் பண்ணமை சீறியா
ழொண்ணுதல் விறலியர் பாணி தூங்க
மகிழ்ப்பதம் பன்னாட் கழிப்பி யொருநா
ளவிழ்ப்பதங் கொள்கென விரப்ப முகிழ்த்தகை
முரவை போகிய முரியா வரிசி
விரலென நிமிர்ந்த நிரலமை புழுக்கல்
பால் வறைக்கருனை காடியின் மிதப்ப
வயின்ற காலைப் பயின்றினி திருந்து
கொல்லையுழு கொழு வேய்ப்பப் பல்லே
யெல்லையுமிரவு மூன்றின்று மழுங்கி

யுயிர்ப்பிடம் பெறாஅதூண் முனிந்தொருநாட்
செயிர்த்தெழு தெவ்வர் திறை துறை போகிய
செல்வச்சேறுமெந்தொல் பதிப்பெயர்ந்தென
மெல்லெனக் கிளந்தனமாக வல்லே
யகறிரோ வெம்மாயம் விட்டெனச
சிரறிய வன்போறு செயிர்த்த நோக்கமொடு
துடியடியன்ன தூங்கு நடைக்குழவி யொடு
பிடி புணர்வேழம் பெட்டவை கொள்கெனத
தன்னறியளவையிற்றரத்தரயானு
மென்னறி யளவையின் வேண்டுவ முகந்துகொண
டின்மை தீர வந்தனென.

## பக்கம 20 [புறம்]

நுஙகோ யாரென வினவினெங்கோக்
களமர்க்கரித்த விளையல வெஙகள
யாமைப புழுக்கிற் காமம் வீடவாரா
வாரற கொழுஞ்சூடங்கவுளடாஅ
வைகு தொழின்மடியு மடியாவிழவின்
யாணர் நன்னாட்டுள்ளும் பாணர்
பைதற சுற்றத்துப பசிப்பகையாகிக்
கோழியோனே கோப்பெருஞ்சோழன்.

* * *

## பக்கம் 21. [திருமுருகாற்றுப்படை]

சீரைதை இயவுடுக்கையர் சீரொடு
வலம்புரி புரையும் வானரை முடியினர்

டாசறவிமைக்கு முருவினா மானி
னுரிவை தைஇய வூன்கெடு மாாபி
னென் பெழூநதியங்கு மியாக்கையா நனபகற
பலவுடன் கழிநதவுணடிய ரிகலொடு
செறற நீக்கிய மனத்தினரியாவதுங
கறறோ றியா வறிவினா கறறோாக்குத
தாம வரம்பாகிய தலைமையா காமமொடு
கடுஞசினங கடிநத காட்சியரிடுமபை
யாவது மறியாவியல் பினா மேவாத
துனியில காட்சி முனிவா

## பக்கம் 21 [புறம்]

ஈனறு புறநதருதல என்றலைக் கடனே
சானறோனுக்குதல தநதைக்குக் கடனே
வேல வடித்துக் கொடுததல கொலலறகுங் கடனே
நனனடை நலகல வேந்தறகுக் கடனே
ஒளிறுவாளருஞ சமமுருக்கிக்
களிறெறிநது பெயாதல காளைக்குக் கடனே

## பக்கம் 22. [பட்டினப் பாலை]

வசையில புகழ் வயஙகு வெண்மீன
றிசைதிரிந்து தெறகேகினும
தற்பாடிய தளியுணவிற
புட்டேம்பப புயன்மாறி
வான் பொய்ப்பினுந தான் பொய்யா
மலைத்தலைய கடற்காவிரி
புனல் பரந்து பொன் கொழிக்கும

விளைவறா வியன் கழனிக
கார்க் கரும்பின கமழாலைத
தீத்தெறுவிற் கவின்வாடி
நீரசெறுவினீ ணெய்தற
பூசசாமபும் புலத்தாஙகட
காயச செநநெற கதிரருநது
மோட்டெருமை முழுக்குழவி
கூட்டு நிழறறுயில வதியுங
கோட்டெங்கிற குலைவாழைக்
காய்க்க முகிற் கமழ மஞசள
னின மாவினிணாப பெண்ணை
முதற சேம்பின் முளையிஞசி
யகனகா வியன் முறறததுச
சுடாநு தன் மடநோக்கி
னேரிழை மகளிருணங் குணாககவருங
கோழி யெறிநத கொடுங்காற கனஙகுழை
பொறகாற் புதல்வா புரவியினறுருட்டு
முக்காற சிறு தோமுன வழி விலக்கும்
விலங்குபகை யலலது கலஙகு பகை யறியாக
கொழும்பல் குடிச செழும் பாக்கத்துக்
குறும்பல்லூா நெடுஞ் சோணாட்டு
வெள்ளையுப்பின் கொள்ளை சாறறி
நெலலொடு வந்த வலவாயப பஃறி
பணைநிலைப் புரவியினணை முதற் பிணிக்குங
கழி சூழ்படப்பைக் கலியாணாப
பொழிற் புறவிற பூந்தண்டலை
மழை நீங்கிய மாவிசும்பின்

டதிசோநத மா வெண்பீ
ஞுரு கெழுதிற லுயா கோட்டதது
முருகமர்பூ முரண்கிடக்கை
வரியணிசுடா வானபொய்கை
யிருகாமததிணை யேரிப
புலிபபொறிப போர்க்கதவிற
றிருத்துஞ சுநதிணகாபபிற
புகபூநிலைஇய மொழிவளர
வறநிலைஇய வகனடடி
சோறு வாககிய கொழுஙகஞகி
யாறுபோலப பரநதொழுகி
யேறு பொரச சேறுகி

அளநதற்யாப பல பண்டம
வரம பறியாமை வநதீண்டி
யருஙகடிப பெருஙகாபபினை
வலியுடை வலலணங்கினோனை
புலிபொறித்துத புறமபோககி

## பக்கம் 24 [புறம]

இரும்பனை வெணடோடு மலைந்தோனலலன
கருஞசினை வேமபின றெரியலோனலல
னினன கணணியு மாமிடைநதனறே நின்னோடு
பொருவோன் கண்ணியு மாமிடைந்தன்றே
யொருவீர தோற்பினுந தோற்பதுங்குடியே

யிருவீர் வேறலியற்கையுமன்றே அதனாற்
குடிப் பொருளன்று நுஞ் செய்தி கொடித்தேர்
நும்போரன்ன வேந்தர்க்கு
மெய்ம்மலி யுவகை செய்யுமிவ்விகலே

## பக்கம் 26 [பொருநராற்றுப் படை]

அறல்போற் கூந்தற் பிறைபோற் றிருநுதற்
கொலைவிற் புருவத்துக் கொழுங்கடை மழைக்க
ணிலவிதழ் புரையுமின் மொழித்துவர்வாய்
பலவுறுமுத்திற் பழிதீர் வெண்பன்
மயிர்குறை கருவி மாண்கடையன்ன
பூங்குழையூசற் பொறை சால்காதி
னாணடச்சாய்ந்த நலங்கிளரெருத்தி
னாடமைப்பணைத் தோளரிமயிர்முன்கை
நெடுவரைமிசைய காந்தண் மெல்விரற்
கிளிவாயொப்பி னொளிவிடுவள்ளுகிர்

வருந்து நாய் நாவிற் பெருந்தகு சீறடி

## பக்கம் 27 [சிறு பாணாற்றுப் படை]

பைந்நனை யவரை பவழங் கோப்பவுங்
கருநனைக் காயாக் கணமயில விழவுங்
கொழுங்கொடி முசுண்டை கொட்டங் கொள்ளவுஞ்
செழுங்குலைக் காந்தள் கைவிரல் பூப்பவுங்
கொல்லை நெடுவழிக் கோபமூரவு
முல்லை சான்ற முல்லையம் புறவின்

விடா தாருவி வியனமலைமூழ்கிச
சூடாகான மாறிய செவ்வி நோக்கித்
திறலவேனு தியிம்பூதத்கேணி
விறலவேல வென்றி வேலூரெயதி.

## பக்கம 27 [நெடுநல்வாடை]

வையகம பனிபப வலனேரபு வளைஇப
பொயயா வானம புதுபபெயல பொழிநதென
ஆரகலி முனைஇய கொடுஙகோற கோவல
ரேறுடை யினநிரை வேறு புலம பரபபிப
புலம் பெயா புலம்பொடு கலங்கிக கோட
னீடிதழக கண்ணி நீரலைககலாவ
மெயக்கொள பெருமபனி நலியப பலருடன
கைககொள கொளளியா கவுளபுடையூஉ நடுங்க
மாமேயன மறபப மநதி கூரப
பறவை படிவன வீழககறவை
கன்றுகோ ளொழியககடிய வீசிக்
குன்று குளிரபபன்ன கூதிரபபானாள
புன்கொடி முசுணடைப பொதிப்ப புறவானபூப்
பொன்போற பீரமொடு புதறபுதன் மலரப
பைஙகாற கொக்கின மென்பறைத் தொழுதி
யிருங்களி பரந்த வீரவெண் மணற்
செவவரி நாரையோ டெவவாயுங் கவரக்
கயலற லெதிரக் கடும்புனற சாஅயப
பெயலுலநதெழுநத பொங்கல வெணமழை
யகலிரு விசும்பிற றுவலை கறப
வங்கணகல்வயலா பெயற கலித்த

வண்டோட்டு நெல்லின் வருங்கதிர் வணங்க
முழுமுதற் கமுகின் மணியுறழ் ழெருத்திற்
கொழுமடல் விழ்ந்த குழூஉக்கொள் பெருங்குலை
நுண்ணீர் தெவிள வீங்கிப்பல் திரண்டு
தெண்ணீர் பசுங்காய் சேறுகொள் முற்ற
நனிகொள் சினைய விரவு மலர் வியன்கா

## பக்கம் 34.[புறம்]

உண்டி கொடுத்தோருயிர் கொடுத்தோரே
யுண்டி முதற்றே யுணவின் பிண்டம்
முணவெனப்படுவது நிலத்தொடு நீரே
நீருநிலனும் புணரி யோரீண்
டுடம்பு முயிரும் படைத்திசினோரே
வித்திவான் நோக்கும் புன்புல கண்ணகன்
வைப்பிற் றாயினு நண்ணி யாளு
மிறைவன் றாட்குத வாதே யதனா
லடுபோர்ச் செழிய விகழாது வல்லே
நிலனெளி மருங்கி னீர்நிலை பெருகத்
தட்டோ ரம்ம விவட்டட் டோரே
தள்ளா தோரிவட் டள்ளா தோரே

## பக்கம் 30. [சீவகசிந்தாமணி]

ஊழினீருணப தென்னென்றுரைத்தலு முவந்து நோக்கி
மோழலம் பன்றியோடு முளவு மாக்காதியட்ட
போழ் நிணப்புழுக்கலெனைய் பொழிந்துகப் பெய்துமாந்தித்
தோழயாம் பெரிதுமுண்டு தொண்டிக்களிதனை யென்றான்.
ஊனொடுதேனுங் கள்ளு முண்டுயிர் கொன்ற பாவத்

நீனராய்ப பிறந்த திங்கனினியிவை யொழிமினெனனக்
கானில் வாழ்குறவன் சொலலுங்கள்ளொநேன்றேன்
[கைவிட்டா
லேலீன யெம்முடம்பு வாட்டலெவன் பிழைத்துங்
[கொலென்றான்
ஊன சுவைத்துடம்பு வீக்கி நரகத்திலுறைதனன்றே
யூன்றின துடம்பு வாட்டித் தேவராயுறைதனன்றே
யூன்றி யிவ விரண்டனுள்ளரு முறுதி நீயுரைத்தி டென்ன
யூனறின தொழிநது புத்தேளாவதே யுறுதி யென்றான்.
உறுதி நீயுணர்நது சொனனயுயாகதிச சேறியேடா
குறுகினையின்ப வெள்ளங்கிழுங் குணக் காட்டுளின்றெ
யிறைவனூற் காட்சி கொல்லா வொழுக்கொடேன்றுறத்தல்
[கண்டா
யிறுதிக்கணின பநதுாஙகு மிருஙகனி யிவைகொளென்றான்

## பக்கம் 39 [சிலபபதிகாரம்]

தெரிவுறக் கேட்டதிருத்தகு நலஸீர்
பரிவுமிடுக்கணும் பாங்குற நீங்குமின்
தெய்வந் தெளிமின தெளிந்தோர்ப பேணுமின்
பொயயுரை யஞசுமின் புறஞ்சொற் போற்றுமின்
ஊனுண்டுற மினுயிர்க்கொலை நீங்குமின்
றானஞ செய்மின றவம் பல தாங்குமின்
செய்நன்றி கொலலன்மின தீ நட்பிகழ்மின
பொயக்கரி போகன்மின் பொருண் மொழி நீங்கன்மி
ன றவோரவைக்கள மகலாதணுகுமின்
பிறவோரவைக களம்பிழைத்துப் பெயர்மின்

பிறர்மனை யஞ்சுமின் பிழையுயிரோம்புமின்
அறமனை காமினல்லவை கடிமின
கள்ளுங் களவுங் காமமும் பொய்யும்
வெள்ளைக் கோட்டியும் விரகினிலொழிமி
னிளமையுஞ் செலவமும் யாக்கையு நிலையா
வுளநாள் வரையா தொல்லுவ தொழியாது
செலலுந் தேளத்துக் குறுதுணை தேடுமின்
மல்லன்மா ஞாலத்து வாழ்வீரீஙகென.

## பக்கம் 40 [மணிமேகலை]

யாங்கிருந்த ழுதனை யிளங்கோன்றனக்குப
பூங்கொடி நலலாய் பொருந்தாது செய்தனை
யுடற்கழுதனையோ வுயிரக்கழுதனையோ
யுடற்கழுதனையே லுன்மகனறன்னை
யெடுத்துப் புறங்காட்டிட்டனர் யாரே
உயிர்க்கழுதனை யேலுயிர் புகும்புக்கில்
செயப்பாட்டு வினை யாற்றெரிந்துணர் வரிய
தவவுயிர்க்கன் பினை யாயினுய் தொடி
யெவவுயிர்க்காயினு மிரங்கல வேண்டும்

## பக்கம் 41 [சிலப்பதிகாரம்]

பணையைந் தோங்கிய பாசிலைப் போதி
யணிதிகழ் நீழ லறவோன் றிருமொழி
யந்தர சாரிக ளறைந்தனர் சாற்று
மிந்திர விகார மேழுடன் போகி
புலவூண் டுறந்து பொய்யா விரதத்

தவல நீத்தறிந் தடக்கிய கொள்கை
மெய்வகை யுணர்ந்த விழுமியோர் குழீஇய
வைவகை நின்ற வருகந் தானத்துச
சந்தி யைந்தும் தமமுடன் கூடி
வந்து தலைமயங்கிய வானபெரு பறறத்துப்
பொலம்பூம் பிண்டி நலங்கிளர் கொழுநிழ
னீரணி விழவினு நெடுந்தேர் விழவினுஞ்
சாரணர் வருஉந் தகுதியுண் டாமென
உலக நோன்பிகள் ளொருங்குட னிட்ட
விலகொளிச சிலாதலம்

## பக்கம் 49 [சீவக சிந்தாமணி]

பைந்நாகபபள்ளி மணிவண்ண
னிற்பாயல கொணடு
கைந்நாக ந்துஞ சுஙகமழ
காந்தளஞ சாரல் போகி
மைந்நாக வேலிமலி பலவைத்
தேய நண்ணிக்
கொய்ந்நாகச சோலைக் கொடி
யந்நகர் புக்கவாறும்.

## பக்கம் 50 [சீவகசிந்தாமணி]

மன்னர்தம் வெகுளி வெந்தீ
மணிமுகில் காணமின்னிப்
பொன் மழை பொழியினந்து
மன்றெனிற் புகைந்து பொங்கித்

துன்னினுர் தம்மை யெல்லாஞ்
சுட்டிடுமென்று செம்பொன்
பன்னிரு கோடியுய்த்துக்
கந்தகன் பணிந்து சொன்னுன்.

பொய்கையுட் கமலத்தங்கட்
புள்ளொலுடரச மாயப
வெய்யவன் கதிர்களென்னும்
விளங்கொளித் தடக்கை நீட்டி
மையிருட் போர்வை நீக்கி
மண்ணகட்டந்தை கோலம்
பையவே பரந்து நோக்கிப்
பணி வரை நெற்றி சேர்ந்தான்.



Printed at the India Printing Works, Madras.

# பல்லவர் சரித்திரம்

தென்னிந்திய வரலாற்றின் இடைப்பகுதி

பி. தி. ஸ்ரீநிவாஸய்யங்கார்

இயற்றியது

இரண்டாவது மூன்றாவது பாகங்கள்

(கி. பி. 600—900)

[illegible] பதிப்பு

# பல்லவர் சரித்திரம்

## (இரண்டாம் பாகம்)

## (கி. பி. 600 முதல — 717 வரையில)

## 1. மகேந்திரப் போத்தரையன்

## (கி. பி. 600—625)

கி. பி. 600 முதல காஞ்சீபுரக் காவலரான பல்லவ அரசர் போத்தரையர் என்ற பட்டம் தரித்து வநதனர். 'போத்து' என்னும் மொழி 'பல்லவ' என்பதற்கு மாறு மொழி யாகும ; 'ராஜா' எனபதற்கு 'அரையன்' என்பது ருவி வநதிருபபது போலாகும். இநத அரசருடைய பட்டப்பெயர் வட மொழியினினறு தமிழாய் மாறினதாலே, ல்லவ மன்னரும் தமிழருடனே கலநது தமிழ ராயின ன்று அறியலாம். அன்றியும் இபபொழுது முதல்தான் ாகிருதம், ஸம்ஸ்கிருதம் அன்றித் தமிழிலும் செப்புப டயங்களும், கல வெட்டுகளும் எழுதத் தொடங்கினர். ல்லவர்' என்ற மொழியையும் தமிழிலக்கியங்களில் யோகப்படுத்தக் கவிகள ஆரம்பித்தார்கள. தமிழ்க் காவி ளில் சீவக சிந்தாமணி யில்தான் 'பல்லவர்' என்ற ழி முதல் முதலாகக் காணப்படுகிறது. பல்லவர்க்கு ால-முதல் 'காடவா' எனறும், 'காடு வெட்டி' என்றும்

வேறு பெயர்கள் வந்தன. பல்லவ மன்னர் ஆட்சி பரவப் பரவ, காடுகளை வெட்டி, நாடுகளாய்ச் செய்ததால் இந்தப் பட்டங்கள் வந்தன போலும். இத்தகைய காடவரில் மிக்க உயர்நிலை பெற்றவன நரஸிம்ஹ விஷ்ணுவாமாவின் மகனை மகேந்திரப் போத்தரையன.

இவன் ஆட்சி ஆரம்பித்தபோது பலலவ வேநதர் செல் வாக்கு கலிங்கம் வரையில சென்றது. கலிங்க மென்றால் மகா நதிக்குத தெற்கும, கோதாவரிக்கு வடக்கும் கட லோரமாயிருக்கும் நாடு. கோதாவரிக் கரையிலிருந்து சமுத் திரத்தைத் சூழவியுளள தெலுஙகு நாடும், தமிழகத்தில் தொண்டை மணடலமும், சோழ விஷயமு (சோணாடு) ம், கொங்கு நாடும மகேநதிரப போததரையன கீழிருநதன. இவன் தகப்பனை நரஸிம்ஹவிஷ்ணு காலததில பலலவர் பலம் பல திக்குகளில பரவியது. தகபபனிறநது மகேந் திரன் அரச னனவுடன நடுநாடடி லிருநது அவனுக்குப பெரிய பகைவ னொருவன் தோன்றினை.

இவன் பெயர் புளகேசி. சளுக்கிய குலத்தவன். இவனது தலை நகர்க்கு வட மொழியில வாதாபி யெனறும் மகாராஷ்டரத்தில் பாதாமி யெனறும், தமிழில் வாதாவி யென்றும் பெயர். இவ்வூர் இபபோது நிஜாம் இராஜ்யத்தி இருக்கிறது. அழிநதுபோய்ச் சிற்றூராய்விட்டது. மகே திரனது விரோதியான புளகேசியை இபபோது சரித்தி காரர்கள் இரணடாம் புளகேசி எனகிறார்கள்.

புளகேசி சிம்மாசனம் ஏறினவுடனே, ஸ்ரீ ஹ தேவனை கானயகுபஜ மகாராஜா இமய மலை மு நருமதை வரைக்கும் மேற் சமுத்திரத்தினின்று சமுத்திர மளவும் பரவியிருக்கும் ஆரியாவர்த்த மெ

வட இந்தியாவுக்குச் சக்கரவர்த்தியாய், நடு நாட்டையும் கைப்பற்றலா மென்று நினைத்து, நருமதைக் கரைக்குப் படை யெடுத்து வந்தான. நருமதைக் கரையில் நடந்த போரில் புளகேசியின வீரர் வெற்றி பெற்றுர்; ஸ்ரீ ஹர்ஷ சக்கரவர்த்தியும வந்த வழியைப பார்த்துத் திரும்பிப போனுன. புளகேசியும் இறுமாபபு மிகுந்து திக்கு விஜயம் செய்யப் புறபபட்டான. முதலில (கி. பி. 610) விந்திய மலைபருகிலுள்ள தககண கோசலை நாட்டை ஜயித்தான; பின்பு கலிஙகத்தைக கைபபற்றினுன. அங்கிருந்து தெற்கு நோக்கித் திரும்பிக் கோதாவரிக கரையி லுள்ள பிட்டாபுர (வட மொழியில பிஷ்டபுரம) நகரைப பிடித்துக்கொண டான். கோதாவரியைத் தாண்டி, வேஙகி (இபபோது ஏலூர் என்னும் பட்டணத்துககு அருகில உளளது) யெனனும் பல்லவர் நகரைப பறறி, தன தம்பி குபஜ விஷ்ணுவர்த தனனை அஙகே அரசனுக நியமித்தான். விஷ்ணுவர்த் தனன் பினனுே அபபோது தொடஙகி 400 வருஷஙகள் வேங்கியி லாண்டார். இவர் குலத்துக்குக் கீழ்ச் சளுக்கர் குலம் என்று இபபோது இநதிய சரித்திரத்தில் பெயரிடுவர்.

பினபு கிருஷ்ணை நதியைத் தாண்டி, புளகேசி தெனனுட்டின் மேல வநதான. மகேநதிரன அவனை எதிர்த்துத் தடுக்க முடியவில்லை. அதனுல் ஒரு சளுக்கக் கல் வெட்டில் பின் வருமாறு சொலலி யிருககிறது. "அழுக்கற்ற வெண் சாமரங்களையும, நூற்றுக கணக்கான கொடிகளையும் குடைகளையும் பிடித்துககொண்டு புளகேசியினது அறுவகைப் படைகள் செலலுங்கால் கிளமபின தூளியானது எதிர்க்க வந்த பல்லவேநதிரன ஒளியை மங்கசசெய்தது. பலலவனும் காஞ்சிபுரத்து மதிலகளுககுள போய் ஒளிநது கொண்டான்" னறு இவ்வாறு கூறுவதனுல் புளகேசயும் காஞ்சிபுர மதில்

களைக் கண்டு அஞ்சி அவ் ஆரைச் சண்டை செய்து பிடிக்க முயலவில்லை என்று நினைக்கவேண்டியிருக்கிறது. அன்றி யும் மேலே சொன்ன சளுக்கக் கல் வெட்டில் பின்பு "துள்ளி விழும் கயல மீனகளைக் கண்களாய்க் கொண்ட காவிரி, சளுக்கனது யானைகளின மதநீர் விழுநததால் ஓடாமல் தடைபட்டு, கடல செலல இயலாததாயிற்று. புளகேசியும் பல்லவப பனியைப போக்கடிக்கும் கடுங் கதிரவனாய், சோழ சேர பாண்டியரைக் களிப்புறச் செய்தான்" என் றிருக்கிறது. இதனால் மகேநதிரன புளகேசியுடன் போர் புரிய முடியாமல காஞ்சீபுர மதிலில ஒளிநததால தமிழ் மூவேநதர்க்கும் களிபபு உண்டாயிற்றே யன்றி, புளகேசி தமிழ் நாட்டில வெறறி யொனறும் அடைய வில்லை என்று பொருள கொள்ள வேணடும். புளகேசி வடக்கு முகமாய்த் திரும்பினவுடன் மகேநதிரன் தன கோட்டையை விட்டுப் புறபபட்டு, புலலலூர எனனும் கிராமத்தில சளுக்கனைத் துரத்தி யடித்தான என்று ஒரு பல்லவ சாசனத்தில இருக் கிறது. இது முதல் மகேநதிரனுக்குப் போர் புரிய வேண் டிய அவசியமில்லாமல சமாதானமாய் நாட்டை ஆண்டான்.

மகேநதிரன காலத்தில தெனனாட்டில் சமணர் மிகப் பரவி யிருநதார்கள. அவர்களது செல்வாக்கும் மிகுந திருநதது. பல இடஙகளில் பள்ளிகள கட்டிக்கொண்டு தங்கள் தொழு முறைகளை நடத்தி வநதனர். அவ்வாறு சம ணர் திரண்டிருநத ஊர்களில பாடலிபுத்திரம் (இக் காலத் தில் திருப்பாதிரிபபுலியூர் என்ற அதன் நாமமே எலலோர்க் கும் தெரியும்) முக்கியமானது. அவ்வூரில் அக் காலத்தில் ஒரு வேளாளச் சிறுவன் சமணர் நெறியைப் பின்பற்றித் தருமசேனன் என்னும் பெயருடன் வாழ்ந்தான். பின்பு தன் அக்காள் திலகவதியம்மை புகட்டின கற்புத்தியால்

மருள் நீங்கி, சிவனருளைப்பெற்று, சிவபக்தி மிகுந்து, சிறந்தம் சிவனடியாராகி, இனிய தேவாரங்களைப் பாடத் தொடங்கினார்; ஆகையால் அவர் திருநாவுக்கரசர் என்ற பெயர் பெற்றார். இவரையே அப்பர் என்பர். சமணர்கள் அரசனிடத்தில் செல்வாக்கு மிகுந்திருந்தவர்களாதலால் திருநாவுக்கரசரைப் பலவிதமாகத் துன்புறுத்த ஆரம்பித்தனர். எத்தகைய துயரம் உற்றாலும் திருநாவுக்கரசர் சிவபக்தியை விடாமல் இருந்ததால் இவரது உள்ள உறுதியைக் கண்டு காடவர் கோனும் மனம் மாறி அப்பரிடம் அன்பு பிறந்து, ஞானோபதேசம் பெற்றுச் சிவனடியானாயினன். மேலும், வீடு பெற வழியறியாத சமணர் மொழி பொய்யெனறும், மெய்ம்மொழி யாதெனறும் உணர்ந்து, காடவன் திருவதிகை யென்னும் நகரில் முக்கண்ணனுக்காக, பாடலிபுரத்திலிருந்த சமணரது மண்ணால கட்டிய பள்ளியொடு பாழிகளையும், இடித்துக்கொண்டு வந்து குணதரவீச்சுரம் என்ற கோயிலைக் கட்டினான் என்று **பெரிய புராணத்தில்** சொல்லி யிருக்கிறது.

திருவதிகையில கட்டியது சுடுமண் (அதாவது செங்கல்) கோயில். கர்ப்பக் கிருகம் செங்கலலாலும், பிற்காலத்தில் கட்டிய மண்டபங்களெல்லாம் கருங்கல்லாலும் அது அமைக்கப்பெற்றிருப்பதைக் காணலாம். மகேந்திரன் காலம் வரையில் கிருஷ்ணை நதிக்குத் தெற்கில் சுடு மண்ணாலும், மரத்தாலும் கோயில்கள கட்டினார்களேயன்றி, கற்கோயில்கள் கிடையா. இவன்தான முதல் முதல கற்கோயில்கள் நிருமித்தவன். இவனும் குன்றைப் பாறையாய் வெட்டியெடுத்து, பாறைகளை ஒன்றுமேலொன்றாய் அடுக்கிக் கட்டடங்கள் கட்டினவனல்ல. மலைகளை வெட்டி அதில் தூண்கள் ... சுவர்களைக் கவிர மற்றைய இடங்களைக் குடைந்து

களைக் கர்ப்பக்கிருகம், முன மண்டபமுமாகச் செய்வித்தான். இக் கோயில்களைக் குகைக் கோயில்கள் என்றே சொல்ல வேண்டும். இவ்வகைக் குகைக் கோயில்கள் பல மகேந்திரன் செய்வித்தான. பெஜவாடாவுக்கு அடுத்த உண்டவல்லியிலும் காஞ்சிபுரத்துக்கு அருகில் மாமண்டூர், மஹேந்திரவாடி, சிங்கவரத்திலும, நாமக்கல்லிலும விஷ்ணு ஆலயங்களும், காஞ்சீபுரத்திலிருந்து கொஞ்ச தூரத்துக்குள் உள்ள சீயமங்கலம், பல்லாவரம், வல்லம், தளவானூர், திருக்கழுக்குன்றம் முதலிய ஊர்களிலும திருச்சிராப்பள்ளி மலைமேலும சிவன் கோயில்களும, மண்டகப்பட்டில் திரிமூர்த்தி கோயிலும, புதுக்கோட்டை சீமையில் சித்தன்னவாயில் மலைமேல ஒரு சமண கோயிலும் மகேந்திரன செய்வித்தவை. ஆகையால மகேந்திரன ஒரு மதத்தில அதிகப்பற்றும மற்றொன்றின் மேல பகையும் கொண்டவன அல்ல என்று ஊகிக்கலாம். இவைகளுள் உண்டவல்லியி லுள்ள சேஷசாயி கோயில வேலை முடியாமல நடுவில நின்று விட்டது. ஒரு வேளை கோயில திருப்பணி நடந்துகொண்டிருக்கும போதே புலகேசி படையெடுத்து வந்ததால வேலை நின்று விட்டதுபோலும.

மகேந்திரன மலையைக் குடைந்து செய்வித்த கோயில்களைப் பார்த்த மாத்திரத்தில எளிதில சொல்லலாம். அவைகளைக் கண்டறிவதற்குத் தப்பாத குறிகள் சில உள. அக்குகைக் கோயில்களெல்லாம மலைச் சாரல்களில குடைந்து செய்தவை. மலை யுச்சியிலும இரா, மலையடியிலும இரா; மலையினது அடிக்கும நுனிக்கும நடுமத்தியி லிருக்கும் கோயிலை மலையில குடையும்போது, ஆங்காங்குத் தூண்களையும, சுவர்களையும், சில இடங்களில விக்கிரகத்தையும் செய்வதற்காக விட்டு விட்டு, மிகுந்த இடத்தை மாத்திரம்

குடைந்திருக்கும். தூண்களுககாக விட்ட பாகம், கீழும் மேலும சதுரமாயும, நடுவில மூலை செதுககியும் இருக்கும். தூணினது மொதத உயரம ஏழு முழமும், மேல சதுர மும கீழச்சதுரமும், ஈரிரண்டு முழமும் இருக்கும். சதுரத் தில தாமரைப புஷ்பம செதுககி யிருககும; அனறியும் தூணகளின புறஙகளில மகேநதிரனது படடப பெயர்கள



மஹேநதிரவாமன தூணகள் (பல்லாவரம)

வெடடியிருககும. தூணின போதிகை சதுரப பலகைக் கலலாலானது. சுவர்களில சிததிர வேலை செய்திருக்கும். அதனடுவில் கர்பபககிருகததின துவாரததின பக்கத்தில் துவாரபாலகா விககிரகம செதுககி யிருககும். இநதத் துவாரபாலகா தலைமேல உயாநத தலைபபாகை உண்டு. மகேந் திரன காலத்துத தலைபபாகைகள இவ்வண்ணமே இருநதன போலும். அன்றியும துவாரபாலகர் வலது கை இடது

கை மேல வைத்தும, இடது கை ஒரு பெருங் கதையைப் பிடித்தும், உடல் அதன மேல் சாயநதும், பார்க்கிறவர்களை அடிப்பவர் போல தோற்றுவர். இவையனறிச் சுவர்கள மேல் புராணக் கதைகளைக குறிக்கும் வெகு அழகிய சிலைகள செதுக்கி யிருக்கும். விஷ்ணு கோயில்களில மூல விக்கிரகமும மலையின பாறைகளில மிக அழகாய்ச் செய்து அமைததிருக்கும். இநதக குறிகளலலாது மகேநதிரனது கோயில்களில பலவற்றில கல் வெட்டுக்கள் வடமொழியிலும தமிழிலும் உண்டு.

மகேநதிரன் செய்வித்த கோயிலகளில் மிக அழகியவை சிறறனனவாயில், சிராபபளளி, நாமக்கல் என்ற மூன்று ஊர்களில உள்ளவைகளே. சிற்றன்னவாயில் கோயிலுக்குள் ஐநது சமண முனிவா விக்கிரகஙகள உண்டு. முனிவர் உட்கார்நதிருக்கும் முறையும், அவர் உள்ளத்தின அசையா நிலையை முகத்தில் விளக்கிக காட்டும் சிறப வேலைத்திறமும், கணணால் பார்த்து அறிநது ஆச்சரியபபட வேண்டுமேயன்றி, வார்த்தையால வர்ணிததுச் சொல்ல இயலாது. அனறியும் கோயில் முனமண்டபத்தில் நினறு அண்ணாநது பார்ததால, வனபபு மிகுநத அனனங்கள், யானைகள், தாமரைப பூக்கள், கொடிகள், பெணணுருவஙகள் முதலிய சித்திரங்களைக கலநது எழுதிய கோலம் ஒனறு தெனபடும். கற்பாறை மேல பல நிறஙகளுடைய சாயஙகளைக் கொண்டு ஓவியம் எழுதுவதே வியபபைத் தரும் பணி. அச்சாயஙகள 1,300-வருஷஙகளாக அழியாமல, வாடாமல் இருக்குமாறு எபபடித்தான எழுதினாகளோ, அநத வழியை அறிய வழியிலலை. பழைய காலத்தில இவவித அற்புதச் சித்திரம் பலலவ அரசா ஆதரணையால எழுதபபெற்றதெனபதைவிட, தென்னிநதியா மனதை மகிழச செய்யும் செய்தி வேறுண்டோ?

